# பிறைதொழும் பெண்கள்

( இராவாண்டைப் பாட்டு )

## நாட்டுப் பாடல் தொகுப்பு

தமிழண்ணல்
டாக்டர் இராம. பெரியகருப்பன்
மதுரைப் பல்கலைக்கழகம்

விற்பனை உரிமை :
**மீனாட்சி புத்தக நிலையம்**
60, மேலக்கோபுரத் தெரு
மதுரை - 1

கிளை : 403, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5

ஆ. சிவசுப்பிரமணியன்,
(சிவம்)

# பிறைதொழும் பெண்கள்

( இராவாண்டைப் பாட்டு )

நாட்டுப் பாடல் தொகுப்பு


தமிழண்ணல்
டாக்டர் இராம. பெரியகருப்பன்
மதுரைப் பல்கலைக்கழகம்









விற்பனை உரிமை :
மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக்கோபுரத் தெரு
மதுரை - 1

கிளை : 403, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5

முதற் பதிப்பு : நவம்பர் 1975
சோலை நூலக வெளியீடு - 3


ஆசிரியரின்
பிற நூல்கள்

ஒப்பிலக்கிய அறிமுகம்
சங்க இலக்கிய ஒப்பீடு
குறிஞ்சிப் பாட்டின் திறனாய்வு

விலை ரூ. 3-50

Selling Rights :
**Meenakshi Puthaka Nilayam**
60, West Tower Street
MADURAI-625001.

Branch : 403, Triplicane High Road, Madras - 5.

பவானி அச்சகம், 19, ஓர்க்ஷாப் ரோடு, மதுரை-625001

## படித்துப் பாருங்கள்!

எனது
நாட்டுப் பாடல் தொகுப்பில்
இது மூன்றாவது.

'தாலாட்டு'
எல்லோரிடையேயும்
இலக்கியச் சிறப்புற்றது.
திரைப் படப் பாடல்களில் அது
புத்துயிர் பெற்றது.

'காதல் வாழ்வு'ம்
நாட்டுப் புறவியல்
ஆய்வில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

இப்
'பிறைதொழும் பெண்களும்'
உள்ளத்தைத் தொடுவதுதான்...
உயர்ந்த இலக்கியந்தான்.
அதுமட்டுமா ?
தமிழர்களின்
இரண்டாயிரம் ஆண்டு
நாகரிகத் தொடர்பையே
எடுத்துரைக்கும்
ஈடற்ற பாடல்
இது!

தமிழண்ணல்

# பகுப்பு

# மகளிர் இலக்கியம்

சங்ககாலத்துத் தமிழர் நாகரிகத்தை விளக்கவல்ல நாட்டுப் பாடல் ஒன்று, இன்றும் வழங்கி வருகிறது என்ருல் வியப்புக்குரியதன்ரே? இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாக இருந்துவரும் நாகரிகத்தின் சின்னமாக 'ராவாண்டைப்பாட்டு' என்ற நாட்டுப் பாடல் இலக்கியம் மகளிரிடையே இன்றும் வழங்கி வருகிறது.

மகளிரே கூடிக்கொண்டாடும் **'ராவாண்டை போடுதல்'** என்றதொரு வழக்கம்—ஆடல் பாடல் நிகழ்ச்சி—நோன்பு, தொன்றுதொட்டு இருந்துவந்திருக்கிறது. குறிப்பாகச் செட்டிநாட்டில் அண்மைக்காலம்வரை இவ்வழக்கம் இருந்து வந்தது; இன்றும் மிக அருகிய நிலையில் காரைக்குடி தேவகோட்டைப் பகுதிகளில் மாசி மாதத்தில் 'ராவாண்டை' போடுகின்றனர். இதன்கண் பல கற்பனைத்திறனமைந்த பாடல்கள் பாடப்பெறுகின்றன.

> ''ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்
> புல்லென் மாலை''. (அகம்: 239)

என்பது அகநானூற்றுச் செய்தி. ஒளி பொருந்திய அணிகலன்களை அணிந்த மகளிர் புல்லிய முன்னிரவுப் பொழுதிலே, உயர்ந்த பிறைமதியைக் கண்டு தொழுது,வணங்குகின்றனர். இரண்டாயிரம் ஆண்டுகளாகியும் இன்றும் அம்மகளிரின் வழி வந்த மகளிர் அதே பிறையைத் தொழுகின்றனர். ஆம்; இரண்டாயிரம் ஆண்டுகளாக இடையறவுபடாத நாகரிகம் இது! 'உயர்பிறை தொழும் ஒள்ளிழை மகளிர்' பாடும் பாட்டுத்தான் **'ராவாண்டைப் பாட்டு'**. அன்று எப்படிப் பாடினரோ நாமறியோம். இன்று பாடும் பாடலைக்கொண்டு முந்தைய நிலையை ஓரளவு ஊகித்தறியலாம். எங்ஙனமாயினும்

அகநானூற்று மகளிர் பாடலுக்கும் அரியக்குடி மகளிர் பாடலுக்கும் ஒரு மரபுத் தொடர்ச்சி இருக்கக் கூடும். வழக்கம், சடங்கு, நாகரிகம் ஒன்றுபடுவதால் இலக்கியமும் ஒன்றுபடுதலே இயல்பாகும். இன்று 'ராவாண்டை போடுதல்' அரிதாயிற்று; பாடல்கள் பல மறைந்தன; பாடுவோரும் அருகிவிட்டனர்; சுவைப்போரும் இலர் எனும் நிலை உளது. சுருங்கிய அளவினதாகவே இம்'மகளிர் இலக்கியம்' இன்று கிடைக்கின்றதெனினும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக மரபு இடையறுத தமிழர்தம் நாகரிகமும் பண்பாடும் இலக்கியக் கலைத்திறனும் இதனால் நன்கு விளங்கித் தோன்றுகின்றன.

**'ராவாண்டை நோன்பு'**

ராவாண்டை இன்றும் மகளிரிடையே ஒரு நோன்பாக ஆண்டுதோறும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. 'மாசிப் பிறை கண்டவுடன் மனுக்களெல்லாம் சம்மதிச்சு' ராவாண்டை போடுகிறார்கள். அஃதாவது மாசிமாதம் அமாவாசை முடிந்த பின் பிறை தெரியும் நாளிலிருந்து (மூன்றும் பிறை அல்லது ஐந்தாம் பிறை தொடங்கி) முழுநிலா நாள்வரைக்கும் ஏறத்தாழப் பத்துநாட்கள் இதனைக் கொண்டாடுவர். 'ராவாத்தாள்' என்று பெண் பெயர்போலவும் 'ராவாண்டை' என்று ஆண் பெயர் போலவும் அழைக்கின்றனர். 'ராவாண்டை போடுதல்' எனக் கொண்டாட்டத்தை அழைக்கின்றனர். 'ராவாத்தாள்' எனப் பாடலில் பெண் தெய்வமாக 'நிலா' உருவகிக்கப்படுகிறது. ராவாத்தாளைக் கன்னித் தெய்வமாகவே கருதி வழிபடுகின்றனர். ராவாண்டையின் இறுதி நாளன்று ராவாத்தாளுக்குத் திருமணம் நிகழ்வதாகச் சடங்கு மேற்கொள்வர். எனவே இது ஒரு தெய்வ கன்னியின் திருமண நிகழ்ச்சிபோல் கருதிக் கொண்டாடப்பெறுகிறது. முன்பு மணமாகாத கன்னிப் பெண்கள் மட்டுமே ராவாண்டை கொண்டாடி வந்தனர் என்று கருத இடமுண்டு. இன்று பொதுவாக மங்கலமகளிர் அனைவரும் இதைக் கொண்டாடுகின்றனர். சிறு தெய்வவழிபாட்டுச் சடங்கு முறைகளும் இதில் கலந்துள்ளன. அருச்சனை

செய்தல், மாவிளக்கு வைத்தல், கரும்புத் தொட்டில் கட்டுதல், பலகாரம் படைத்தல் போன்ற பல இன்று ராவாண்டையிலும் உண்டு. அந்தந்த ஊர்த்தெய்வங்களாகிய மாம்பழத்தாள், கொப்பாத்தாள், கோட்டையம்மன், பிடாரியாத்தாள் போன்ற கிராமப் பெண் தெய்வங்களாக 'ராவாத்தாள்' (நிலா மகள்) உருவகிக்கப்படுகிருள்.

நல்ல கணவன் வாய்க்கவேண்டும் என்பதே இக்கன்னி மகளிரது கொண்டாட்டத்தின் தொடக்ககால உட்கோளாகும். காலப்போக்கில் ''இல்லறம் சிறக்க வென்றும், கருவயிறு உறுக என்றும், மழைவளம் சுரக்கவென்றும் வளம்பல பொலிக வென்றும்'' இதனைக் கொண்டாடி வந்துள்ளனர். நீண்ட நாட்களுக்கு முன்பெல்லாம் ஊர் நடுவே தெருவில்தான் ராவாண்டை போடுவது வழக்கமாம். காலப்போக்கில் யாரேனும் ஒருவர் வீட்டில் ராவாண்டைபோடுவது வழக்கமாயிற்று. இதற்கு ஏற்ற வீடாகத் தேர்ந்தெடுத்துக்கொள்வர். சிலர் ராவாண்டைபோட வீடுவிடுவதாக ராவாத்தாளுக்கு வேண்டிக் கொள்வதும் உண்டு வீட்டுத்திறந்தவெளி முற்றத்தில் இது நிகழும். ஒவ்வொரு நாளும் மகளிர் நன்கு குளித்து முழுகிப் பூச்சூடி மங்கலம் சிறக்க வருவர். பலரும் சேர்ந்து நின்று, பாடிக்கொண்டே கும்மியடித்து மகிழ்வர். ராவாண்டைப் பாடலில் வல்ல வாய்மொழிப் பாடகி பாட, அனைவரும் ஒருசேரத் திரும்பப் பாடிக் கும்மியடிப்பர். பல் வகையான ஆடல்பாடல்களில் பொழுதுபோகும். இது மகளிருக்கே உரிய 'நிலா நோன்பு' ஆதலால் ஆடவர் இல்லாத இல்லங்களிலேயே இது நிகழும். இக் கொண்டாட்டம் நிகழும் நேரத்தில் அவ்விடத்திற்கு ஆடவர்களும் வாரார். இது முழுக்க முழுக்க மகளிருக்கேயுரிய 'நோன்பாக'க் கருதப்பட்டு வந்திருக்கிறது.

ராவாண்டை போடுமிடத்தில் பந்தர் இடுவர்; புது மணல் பரப்புவர். ஒவ்வொரு நாளும் திருமணத்திற்குப் புனைந்து அலங்கரிப்பதுபோல ராவாண்டை போடுமிடம்

அலங்கரிக்கப்படும். புதிது புதிதாகத் தோரணங்கள் கட்டுவர்; முன்னதாக இருபுறத்தும் வாழை மரம் கட்டிவைப்பர். எங்கு பார்த்தாலும் பல்வகைக் கோலங்கள் நிறைந்து காட்சி யளிக்கும். கோலமிடுவதற்கும் ராவாண்டைக்கும் நெருங்கிய தொடர்புண்டு. மகளிரே கொண்டாடும் விளையாட்டு நோன் பாதலால் கோலத்தை இதன் சிறப்புக் கூறுகளில் ஒன்றெ-னலாம். செட்டி நாட்டில் திருமண வீடுகளில் மணமனையைச் சுற்றியும் வீட்டினுள்ளும் பெரிது பெரிதாகக் கோலங்கள் போட்டுவைப்பர். இதுபோலவே ராவாத்தாள் கோலமும் பெரிதாக இருக்கும். 'குயிலும் மயிலும் கூடியிருந்து கோல மிடும்; பிஞ்சும் பிலாக்கரயும் பின்னியிருந்து கோலமிடும்!' பெண்கள் தத்தம் வீட்டிலிருந்து பச்சரிசி மாவை அரைத்துக் கொண்டுவந்து, கோலம் போடுவதை ஒரு கடமையாகக் கொண்டு செயலாற்றுவர்.

இரவில் பிறைதோன்றும் நேரத்தை ஒட்டித் தொடங்கி அது மறையும் நேரத்தில் முடிப்பர். நாள் தோறும் பிறையும் கூடிவரும்;கொண்டாடும் நேரமும் கூடுதலாகும். ராவாண்டை போடவரும் மகளிர் கூட்டமும் கூடிக் கொண்டே வரும். இறுதிநாளாகிய முழு நிலாவன்று விடிய விடிய நடைபெற்று முடிவுறும். பொங்கலிடுதல், மாவிளக்கு வைத்தல்,தொட்டில் கட்டுதல் போல்வன இறுதி நாளில்தான் நிகழும்.

சிலர் ராவாண்டையில் அதிரசம் போட்டுப் படைப்-பதாக வேண்டிக் கொள்வர். அதுபோலவே ஒருநாள் கொண்டுவந்து காணிக்கை செலுத்துவர். பிறரும் இது போலவே அப்பம், சுண்டல், வடை, பணியாரம் போன்ற பலகார வகைகளைப் படைப்பதாக வேண்டிக்கொண்டு, அதன் படியே ஒவ்வொரு நாள் கொண்டுவந்து படைப்பர். அன்றன்று ராவாண்டை முடிவுற்றதும் இதைப் பெற்றுக் கொண்டு அதிகாலையில் மகளிர் தத்தம் வீடுசெல்வர். இறுதி நாளன்று இப்படையல் மிகுதியாக இருக்கும் என்பர்.

வழிபடும் இடத்தில் சதுரமாக வீடுபோல் களிமண்ணால் கட்டி, அதற்குள் ராவாத்தாள், கன்னிப்பெண்கள் எழுவர், கிழவன், கிழவி என்ற உருவங்கள் மண்ணினால் பிடித்து வைக்கப்படும். இன்றும் மணநிகழ்ச்சிபோல் கொண்டாடப்படும் ராவாண்டையில் கிழவன், கிழவி எனத் தலைவன் தலைவியைக் களிமண்ணால் பிடித்து வைக்கின்றனர். தொல்காப்பியமும், சங்க நூல்களும் பற்றி அறியாத பெண்கள் இவை வயது சென்றவரைக் குறிக்கும் என எண்ணுகின்றனர். ஆனால் அவர்களையும் அறியாமல் அவர்கள் மரபுப்படி கொண்டாடு வதிலிருந்து இவை தலைவன், தலைவியரே என நாம் உணர்ந்து கொள்ள முடிகிறது. அதற்குள் அடுப்பு, பானை, இடுக்கி, சுளகு, அம்மி என வீட்டுச் சாமான்கள் பலவும் சிறுசிறு விளை யாட்டுச் சாமான்கள் போலச் செய்து வைக்கப்படும். இது சிறுமியர் சிற்றில் இழைத்துச் சிறுசோறு சமைத்து விளையாடு வதையே நினைப்பூட்டுகிறது. விழா முடிவுற்றதும் களி மண்ணாற் செய்த இவை அனைத்தையும் அப்படியே கூடையில் எடுத்துச் சென்று குளத்தில் விட்டுவிடுவர். இதற்குக் **கொப்பி கொட்டுதல்** என்று பெயர்.

மகளிர் வரிசையாக நின்று கொண்டு,

**ஒருபடி கம்பரிசி வள்ளி ஏலோ**
**ஒரு பானை சோறு பொங்கி வள்ளி மானே!**

**இருபடி கம்பரிசி வள்ளி ஏலோ**
**இரண்டுபானை சோறுபொங்கி வள்ளி மானே!**

என்று ஒவ்வொருவரும் ஒவ்வோரடிவீதம் பாடி எண்ணிக்கை யைக் கூட்டிக்கொண்டே செல்வர். எழுவர், ஒன்பதின்மர் என ஒற்றைப்படப் பலராகக் கூடிநின்று பாடி ஆடுவர். கைகளிரண்டையும் தலைக்குமேலே உயர்த்திக் கொட்டியும் மார்பளவில் தாழ்த்திக் கொட்டியும் பிறகு குனிந்து கொட்டி யும் ஆடுவர். ஒரே சமயத்தில் வரிசை நகரவேண்டும்; ஒரே

நேரத்தில் கைகொட்டவேண்டும். சந்தமுடன் கூடியபாடல் இக்கொட்டுடன் பொருந்த அமையவேண்டும். இதனை அனுபவம் உடையவர்கள் அடிக்கடி வலியுறுத்தி, இளம் பெண்களைத் திருத்தமுற ஆடுமாறு பழக்குவர். முற்கூறிய 'ஒருபடி கம்பரிசி' என்ற பாடல் இங்ஙனம் கொட்டி ஆடுவதற்கு ஏற்ற சந்தம் உடையது. நாட்டுப்பாடல் வடிவ அமைப்பிற்கு அதன் சந்தப் பொருத்தமே இலக்கணமாகும். ஆடலுக்கேற்ற இசைச் சந்தமும் சந்தத்திற்குப் பொருந்தப் பாடலும் அமையும். பழங்காலக் குரவை ஆடலையும் குரவைப்பாடலையும் இது நினைப்பூட்டுகிறது.[1]

---

1. ஆடலுக்கேற்ற பாடல் அமைப்பு நாட்டுப்பாடல் பண்புகளில் ஒன்றாகும்.

'சொட்டாங்கி பிடித்தல் என்னும் கழற்சிக்காய் ஆடுதற்கேற்ற பா கீழ் வருவது:

ஒரு முத்துப் போட்டெடுப்பாள் எங்கள் முத்துமாரி,

இனம் வளரும் தாயே, எங்கள் பரம் ஜோதி!

விளையாடப் பெண் பிறந்தாள் வெள்ளிரதம் போலே!

இரண்டு முத்துப் போட்டெடுப்பாள் எங்கள் முத்துமாரி,

இனம் வளரும் தாயே, எங்கள் பரம்ஜோதி !

விளையாடப் பெண் பிறந்தாள் வெள்ளி ரதம் போலே!!

இப்பாடலில் கழற்சிக்காய் பிடித்து ஆடுவதற்கேற்ற சந்தம் உளது. ஒரு முறை முத்துக்களை ஒவ்வொன்றாக எடுப்பதற்குத் தோதாக ஓரடி அமைகிறது. ஒவ்வொரு முறையும் பாட்டும் தவறாமல் காயும் தவறாமல் பிடித்து விடுவாள் பெண். இறுதியாகத் தவறிவிடும்போது, அதுவரை எத்தனை தரம் முத்துப் போட்டுப் பிடித்தாள் என்பதைப் பாடலில் வரும் எண்ணிக்கை காட்டிவிடும். ஒவ்வொரு சந்தமும் (Rhythm) ஒவ்வொரு காயை எடுப்பதற்குத் தோதாகத் தாளம்போல் அமைகின்றது.

## கொப்பி கொட்டுதல்

ராவாண்டையுடன் தொடர்புபட வருவனவும் மகளிரே பங்கு கொள்வனவுமான வேறுசில சடங்கு நிகழ்ச்சிகளும் (rituals) இவண் குறிப்பிடத் தக்கனவாகும். அவற்றுள் **கொப்பி கொட்டுதல், மதுவெடுத்தல்** என்பன இன்றியமையாதன.

தை மாதம் இரண்டாம் நாள் மாட்டுப் பொங்கலன்று, சாமிக்குப் படைக்கும்பொழுது, 'கொப்பிக்கு ஒரு பொங்கல்' என எடுத்துவைப்பர். சாணிப்பிள்ளையார், ஒரு தேங்காய் மூடி, சிறு கரும்புத்துண்டு, வெற்றிலை பாக்கு, மஞ்சள்போல்வனவெல்லாம் ஒரு சிறு விளக்குச் சட்டிக்குள் எடுத்துவைப்பர். மறுநாள் காலையில் இவற்றைக் கூடையில் வைத்து எடுத்துச் சென்று, பிள்ளையார் கோயிலுக்கு எதிரேயுள்ள குளக்கரையில் வைத்துவிட்டுக் கூடிநின்று 'கொப்பி' கொட்டுவர். இறுதியில் படையலைத் தண்ணீரில் விட்டுவிட்டு வீடு திரும்புவர். சமையும் முன் (பூப்படையும் முன்) கன்னி மகளிராயுள்ள பெண்களே கொப்பி கொட்டச் செல்வர்.

'கும்மியடித்தல்' போன்ற சொல்லே 'கொப்பி கொட்டுதலும்' எனலாம். திருத்தக்கதேவர் சீவக சிந்தாமணியில் **"குடங்கையாற் கொம்மை கொட்டுவ போன்ற"** (காந்தர்வ : 37) என்று உள்ளங்கையால் தட்டுதலைக் குறிப்பிடுகிறார். கொம்மை கொட்டுதல், கொப்பி கொட்டுதல், கும்மி கொட்டுதல் என்ற தொடர்கள் ஒன்றினொன்று இயைபுடையவாதல் காணலாம்.

கொப்பி கொட்ட எடுத்துச்செல்லும் கூடையையும் அதனுள் வைக்கப்படும் தேங்காய், வெற்றிலை பாக்கு முதலியவற்றையும் 'கொப்பி' என்றே கூறுவர். இக் கொப்பி பொதுவாகப் பனையோலைக் கூடையில் இருக்கும். காலப்

போக்கில் பெரும் செல்வர்கள்-பகட்டுக்குப் பேர்போன செட்டி நாட்டில், தங்கள் சுய விளம்பரத்திற்கு இதைப் பயன்படுத்திக் கொண்டனர். எல்லோரையும் போல் தாமும் கொண்டு போவதால் தமது பகட்டுப் புலனாகாது என்று பெரும் செல் வர்கள் தங்கத்தினாலும் வெள்ளியினாலும் கூடை முதல் வெற்றிலை பாக்கு வரை செய்து வைத்து, அவற்றைப் பலர் கூடியுள்ள குளக்கரைக்கு ஊர்வலமாக எடுத்துச் செல்வர். இதனால் குளத்தங்கரையில் வைக்கப்பட்டவற்றுள் பல பனை யோலைக் கூடைக் கொப்பியாகவும் சில வெள்ளிக் கொப்பி யாகவும், மற்றும் ஒன்றிரண்டு தங்கக் கொப்பியாகவும் இருக்கும். பார்ப்பவர்கட்கு ஏற்றத் தாழ்வுகளைக் காட்டிப் பளிச்சிடும். ஆனால் பனையோலைக் கூடையில் அமைந்த கொப்பியைக் கொண்டு செல்பவர்கள் அவற்றைக் குளத்தில் கொட்டிவிட்டுத் திரும்புவர். செல்வர் வீட்டுத் தங்க, வெள்ளிக் கொப்பிகளை எடுத்துச்செல்பவர்களோ அவற்றைத் தண்ணீரில் விட்டுவிட மாட்டார்கள்; தண்ணீரின் மேலாகக் காட்டிவிட்டுத் திரும்ப எடுத்துக்கொண்டு வந்துவிடுவார்கள்!

இதுபோல் தண்ணீரில் கொண்டுபோய்விடும் வழக்கம் பிள்ளையார் நோன்புக்கு மறுநாளும் உண்டு. பதினெட்டாம் பெருக்கில் பழைய சுவடிகளைக் கொண்டுபோய்க் குளத்தில் விட்டு வருவதுண்டு. ராவாண்டை முடிந்த மறுநாட்காலை யிலும், களிமண்ணால் பிடித்துவைத்த அனைத்தையும் அள்ளிச் சென்று குளத்தில் விட்டு வருவர். இதனால் கொப்பி கொட்டுவ தென்பது ராவாண்டையுடனும் தொடர்புடையதாயிற்று.

**மதுவெடுப்பு**

தொன்று தொட்டுத் தமிழகச் சிற்றூர்கள் பேரூர்கள் அனைத்திலும் ஏதேனும் ஒரு கோயில் திருவிழா ஆண்டுதோறும் மிகச் சிறப்பாக நடைபெறும். இத் தெய்வத் திருவிழாவிற்கு இரண்டு, மூன்று வாரங்கட்கு முன்னதாக **மதுக்குடம்** அல்லது **மதுவெடுப்பு** என்ற நிகழ்ச்சி தொடங்கும். வாழ்

வரசிகளான மங்கல மகளிர் ஐவர் அல்லது எழுவர் அல்லது ஒன்பதின்மர் கோயிலில் தங்கி, ஒருவேளைமட்டும் உண்டு ஆறேழு நாட்கள் நோன்பிருந்து, விழாத் தொடங்குவதற்குச் சில நாட்கள் முன்னதாக மதுவெடுப்பர். இரவு நேரத்தில் மதுக்குடத்தை ஊர்வலமாக எடுத்துவந்து சாமிக்குப் படைப்பர். பானையில் கோலமிட்டு, உள்ளே மதுவை ஊற்றித் தென்னம் பாளையை மேலே செருகி வைத்திருப்பர். பிற்காலத்தில் மதுவிற்குப் பதிலாகப் பானகம் ஊற்றிவைப்ப துண்டு என்று கூறுகின்றனர். நோன்பிருக்கும் மங்கல மகளிர் உடல் நிறைய மிகுதியான அணிகலன்களை அணிந்து விளங்குவர். இது விழாத் தொடங்குவதற்கு அறிகுறியான (விழாவிற்கு முன் நிகிழ்கின்ற) நிகழ்ச்சியாகும்.

சோணையன், உளிவீரன், பதினெட்டாம்படிக் கறுப்பன் போன்ற சிற்றூர்ப்புறத் தெய்வங்கட்கு மதுவைப் படைக்கும் வழக்கம் உண்டு. **அரக்கு வைத்தல்** என்று சாராயம் படைத்தல்கூட உண்டு. இம் மதுவெடுப்பின் போதும் நல்ல பல நாட்டுப்பாடல்கள் பாடப்பட்டன என்று தெரிகிறது. அவற்றை **மதுக்குடப் பாட்டு** என்பர்.

இதனை ஒத்த வேறுபல வழக்காறுகளும் இங்கு நினைவு கூரத் தக்கனவாகும். **முளைப்பாலிகை**(முளைப்பாரி)**எடுத்தல்** என்பது நல்ல மழை பொழிந்து விளைவு பெருக வேண்டும் என்பதைக் கருதி எடுப்பது. வீடுவாசல் சுத்தம் செய்து கழுவிவிடுவர். உடைந்த முட்டிகளில் அல்லது கரகத்தில் நெல், பயறுவகைகள் முதலியவற்றைப் போட்டு அவை முளை விட்டதும் இரவில் மங்கல மகளிர் ஊர்வலமாக அவற்றை எடுத்துச் சென்று நீர் நிலைகளில் விட்டுவருவர். அப்போது பாடும் பாட்டிற்கு **முளைப்பாரிப் பாட்டு** என்று பெயர். தைப் பிறைக்கு முளைப்பாலிகை எடுத்தல் வழக்கம் என்று கூறுகின் றனர். பேய், பிசாசுகளின் தீங்கினின்றும் விடுபடுவதற்கு இரவில் பொங்கல் இட்டுக் கப்பரையில் எடுத்துச் சென்று

சோணையன், கறுப்பன் போன்ற தெய்வங்கட்குப் படைப்பதை **கப்பரை எடுப்பு** என்று கூறுவர். இரவில் ஊர்வலமாகப் போகும் போது எரிகொள்ளிகளையோ, சோற்றையோ வானத்தை நோக்கி எறிவர் என்றும், அவற்றைப் பேய்கள் எடுத்துச்சென்று விடுவதால் அவை திரும்பி நிலத்தில் விழுவதில்லை என்றும் கூறுவர். குயவனிடம் மண் குதிரைகள் வாங்கி ஊர்வலமாக எடுத்துச் சென்று ஐயனர் கோயிலில் வைத்துத் திரும்புவதற்குப் **புரவி எடுப்பு** என்று பெயர்.

இங்கு ராவாண்டை போடும்போதும் இதுபோல 'மது வெடுப்பு' நிகழ்ச்சி மிகத் தொன்மைமிக்க காலத்தே உண்டு என்று தெரிகிறது. 'மதுக்குடப் பாட்டு' என ராவாண்டையில் வரும் பாட்டு இலக்கிய நயம் மிக்கதாகும். இதுகாறும் ராவாண்டை போடுதல் மற்றும் அதனேடு தொடர்புடைய சடங்குமுறைகள் உணர்த்தப்பட்டன.

**பிறையின் அருமை**

மூன்றும் பிறைதான் கட்புலனுகும். அதனைக் காண்பது மிகவும் அரிதாகும். இன்றும் ரம்சான் பண்டிகையின்போது இசுலாமியர்கள் பிறைகண்டு தொழுவதையே முக்கிய நோன்பாகக் கொண்டுள்ளமையை அறிகிறோம். பிறை தெரிந்தால்தான் நோன்பு கொண்டாடுவர், பிறை தெரிந்த செய்தி செய்தித்தாள்களிலும் வெளியிடப்படுகிறது. தமிழகத்தில் 'கார்த்திகைப் பிறைபோல்' எனவும் 'அத்தி பூத்தாற்போல்' எனவும் அழகும், அருமையும் உணர்த்தும் பழமொழிகள் சில வழங்கக் கேள்விப்பட்டிருக்கிறோம். திங்கள் தோறும் இப்பிறை தொழும் வழக்கம் நிலவிவந்திருக்கிறது. சில மாதங்களில் இதன் இன்றியமையாமை மிகுதியும் உணரப்பட்டிருக்கிறது.
இன்றும்

'ஆடிப் பிறையைத் தேடிப்பாரு'
'தைப் பிறையைத் தடவிப்பாரு'
'மாசிப் பிறையை மறக்காமல் பாரு'

என்று உலகவழக்கில் கூறுகின்றனர். உலகத்தார் பிறைக்கும் மழைக்கும் தொடர்புண்டென்றும் கருதுகின்றனர். இப்பிறை

'வடக்கே சாய்ந்திருந்தால் வயலெல்லாம் பொன்னு;
தெற்கே சாய்ந்திருந்தால் தெருவெல்லாம் பெட்டி"

என்று வழங்குவதினின்றும் இதனை அறியலாம். விளைவு குன்றினால் ஏழைகளுக்கு வார்க்கும் சோற்றுக்காகத் தெருவெல்லாம் ஓலைப் பெட்டிகளை வைத்துக்கொண்டு மக்கள் காத்துக்கிடக்கும் அளவு பஞ்சம் உண்டாகும் என்பது இதன் கருத்து.

'வசையில் புகழ் வயங்கு வெண் மீன்
திசை திரிந்து தெற்கேகினும் ....'

என்று பட்டினப்பாலை தொடங்கும். இதன்படி குற்றமற்ற புகழினையுடையதாய் விளங்கித் தோன்றும் வெள்ளி (சுக்கிரன்) தான் நிற்கவேண்டிய வடதிசைக்கண் நில்லாமல், மாறுபட்டுத் தென் திசைக்குச் சென்றால் மழைவளம் குன்றி வறுமை மிகுமென்று தெரிந்துகொள்கிறோம். உலகப் பழமொழியும் இக் கருத்தே பற்றித் தோன்றிப் பின் அறியாதவர்களால் பிறையுடன் தொடர்புபடுத்திப் பேசப்பட்டிருக்க வேண்டும். 'எது சாய்ந்திருந்தால்' என்று அப்பழமொழி தெளிவாகச் சுட்டாமையும் இதனையே வலியுறுத்துகிறது.

## குடை மங்கலம்

மன்னனுடைய அரியணையில் வெண்கொற்றக் குடை விளங்குகிறது. தண்ணருள் பரப்பும் ஆட்சி நிழலினை நினைப்பூட்டும் சின்னமாகும் அது. எனவே பாணரும் புலவரும் இவ் வெண்கொற்றக் குடையை முழுமதி போன்றதென ஒப்பிட்டுப் பாராட்டித் தொழுது மகிழ்ந்தனர். உறையூர் மருத்துவன் தாமோதரனார் சோழனைப் பாடிய புறப்பாடலில் அரசனின் வெண்கொற்றக் குடைபோலக் காட்சி அளித்தலின் விறலியும்

பாணனும் முழுமதியைத் தொழுத செய்தியைக் குறிப் பிட்டுள்ளார்.

உச்சி நின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதனெம் அல்லமோ பலவே; வளவன்
வெயில் மறைக் கொண்ட உருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை ஒக்குமால் எனவே!

(புறம் : 60)

'தீமையாகிய வெப்பத்தை மறைத்தற்கு எடுத்ததும் அச்சம் தருவதும் தலைமையுடையதும் மாலையணிந்ததுமாகிய சோழ மன்னனது வெண்கொற்றக் குடையை ஒக்கும் என்று கருதி, உச்சியில் நின்ற நிறைமதியைக் கண்டு காட்டுள் வாழும் மயில்போலும் விறலியும் பாணனும் பலமுறை தொழு தனர்'', என்பது இஃதுணர்த்தும் செய்தி. இது பாடாண் திணையில் **குடை மங்கலம்** என்னும் துறையாகும். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை இத்துறை அமைதியுடன் தொடங்கக் காண்கிறோம்:

திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடை
போன்று இவ்
அங்கண் உலகளித்த லான்''

சோழனது குடைபோன்று உலகளித்தலால் திங்களைப் போற்றுதும் எனக் குறிப்பிடப்படுகிறது இங்கு. மங்கல மொழி யில் தொடங்கும் இயற்கை வாழ்த்தாகவும் அதே சமயத்தில் குடையினைப் புகழ்வதால் குடை மங்கலத் துறையமைந்த அரச வாழ்த்தாகவும் இது சிறப்புறுகிறது.

**இறைமுடி சூடிய**

**பிறைத்திங்கள்:**

திருவுடை மன்னரைச் சார்த்தி வணங்கப்பெறும் பிறை, இறைவனைச் சார்த்தியும் வணங்கப் பெறுகின்றது. முல்லைக் கலியுள் சோழன் நல்லுருத்திரனார் **எரிதிகழ் கணிச்சி யோனாகிய சிவபெருமான் சூடிய பிறை** எனச் சிறப்பிக் கின்றார் (103). புறநானூற்றுக் கடவுள்வாழ்த்துப் பாடலில்,

**பிறைநுதல் வண்ணம் ஆகின்று அப்பிறை**
**பதினெண் கணனும் ஏத்தவும் படுமே**

என்று தேவர்களும்பிறை தொழுதல் கூறப்படுகிறது. **குழவித் திங்கள் இமையவர் ஏத்த** (சிலம்பு : 2 - 38) என்று சிலப்பதிகாரமும் சுட்டுகிறது. எனவே பிறையும் கடவுளால் சூடிக்கொள்ளப்பட்டதால் இறைமைத்தன்மை உடையதாகக் கருதப்பட்டு மக்களாலும் தேவராலும் தொழப்பட்டது.

**பிறையும்**

**பெண்ணழகும்**

**கோடுவாய் கூடாப் பிறை** (142) என்று கலித் தொகை பிறையின் அழகைப் புனையும், வட்டம் சேராத—இரு முனையும் ஒன்றாத பிறையின் அழகை இது பேசுகிறது. அந்திச் செவ்வானம் இவ்வளர் பிறையாம் மூன்றும் பிறையைச் சூடி அழகுற்று விளங்குவதைப் பெரும்பாணாற்றுப்படை வரைந்து காட்டுகிறது. வளர்பிறை மேற்குச் செவ்வானில் தோன்றி, ஒவ்வொரு நாளும் சிறிது சிறிதாக மேலேறி, இறுதியில் கீழ்த் திசையில் முழு நிலாவாகப் பூரித்து எழும். தேய் பிறையோ கிழக்கில் தோன்றிச் சிறிது சிறிதாக ஒவ்வொரு நாளும் மேலேறித் தேய்ந்து இறுதியில் முற்றும் மறையும். இங்கு மேற்குச் செவ்வானத்தில் தோன்றும் வளர்பிறையை,

'அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்
அந்தி வானத்து'

எனச் சிறப்பிக்கும்போது சங்கப் புலவர்கள் (பெரும்பாண்:411—12) இயற்கையழகில் காட்டும் ஈடுபாடு புலனாகிறது. இலக்கியத்தில் பெண்மையின் பொலிவோடு இயற்கைக் காட்சி ஒப்புமைப் படுத்திப் பாடப்பெறுவது உள்ளத்தைக் கவரும். பிறை மகளிரின் நெற்றிக்குப் பொருந்திய உவமை யாகும்:

இலங்கு நிலவின் இளம் பிறை போலக்
காண்குவம் தில்ல அவள் கவின்பெறு சுடர்நுதல் (ஐங்: 443)

என்றாற்போல வருமிடங்கள் பலவாகும். 'பிறை நுதல்' என்ற வழக்கு மிகுதிப்பட்டுப் பிறை என்ற அளவிலேயே நெற்றியைக் குறிக்குமளவு அது இலக்கியத்தில் 'உரு'ப் பெறுவதாயிற்று.

'மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்....' (குறு:129)

என்று எட்டாம் நாட்பிறை திருந்திய நெற்றிக்குத் தேர்ந்த உவமையாயிற்று. பக்கம் என்பதைப் பட்சம் என்பது வட மொழி வழக்கு. கருங் கூந்தல் சூழ விளங்கும் நெற்றி நீல வானத்தில் எட்டாம் பக்கத்துப் பிறைபோல்வதெனக் கூறப் படும் நுட்பம் அறிந்தறிந்து மகிழ்தற்குரியதாகும்.

**'இறையோன் சடைமுடிமேல் எந்நாளும் தங்கும் பிறைநேர் திருநுதலும்'** (தண்டி. பொருளணி: 5) எனக் கூறு மிடத்து இறைவன் முடியேறுவதால் இறைமைத் தன்மை பெற்ற பிறை என்றும் அப்பிறை போல்வதால் மகளிரிடத்தும்

இறைமைத் தன்மை உண்டென்றும் எண்ணுமாறு உவமை விரித்துரைக்கப்படுகிறது.

திருவள்ளுவர் **நலம் புனைந்துரைத்தல்** என்ற பகுதியில் பெரும்பாலும் 'முழு மதி போன்ற முகம்' என்ற உவமையை வேறு வேறு கற்பனையால் வகைப்படுத்த முயல்கிறார். பெண்ணின் முகத்தை மதி எனப் புனைவதே தமிழ் இலக்கியத்திலும் பெருவழக்கு. திருவள்ளுவர் காட்டும் தலைவர் தத்தம் தலைவியர்களைப் பார்க்குந்தோறும் முழு மதியை நினைவுகூர்கின்றார்கள். வானத்திற்போல வையத்திலும் ஒரு முழுமதியைக் கண்டு, விண்மீன்கள் தங்கள் இடம் எதுவென்று தெரியாமல் திண்டாடுகின்றன என்பது ஒரு திருக்குறட் தலைமகன் பாராட்டு. மற்றொருவன், 'மதிக்குக் களங்கமுண்டு, மாதர் முகத்தில் களங்கமில்லை' என்பதிலே மகிழ்ச்சி கொள்கிறான். ஒருவன் புதுமையாக மதியைப் பார்த்து, 'உன்னால் மாதர் முகம்போல் ஒளிவீசித் திகழ முடியாது; முடியுமாயின் மதியே நீயும் அன்புக்குரியை; வாழ்வாயாக' எனப் போற்றுகிறான். 'மலர் போன்ற கண்ணாளின் முகம்போல இருப்பதனால், மதியே நீயும் எனக்கே உரியை. ஆகவே பலர் காணுமாறு தோன்றாதே' என ஒரு தலைவன் புகழும்போது நமக்குச் சிரிப்புத் தோன்றுகிறது.

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன்.

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி.

மலரன்ன கண்ணாள் முகம் ஒத்தி யாயின்
பலர் காணத் தோன்றல் மதி.

(1116-1119)

இவ்வழக்காற்று மிகுதியால் 'மதி' என்ற அளவே முகம் தோன்றுமளவு பொருள் தொடர்பு உண்டாயிற்று. பாற் கடலிலிருந்து மதியும் இலக்குமியும் பிறந்ததாகவ நம் புராணச் செய்தியினுல் இவர்களிடையே உடன் பிறப்பு உண்டென்றும் பாராட்டுவர்.

குழவித் திங்கள் இமையவர் ஏத்த
அழகொடு முடித்த அருமைத்து ஆயினும்
உரிதின் நின்னேடு உடன்பிறப்பு உண்மையின் ...

(2:38—40)

என்று சிலப்பதிகாரத்தில் இச்சிறப்பு இடம் பெறுகிறது. இமையவரும் ஏத்தும்படியாகச் சிவபெருமான் அழகொடு முடித்த அருமைப்பாடு உடையது குழவித் திங்களாகிய இளம் பிறை. ஆயினும் அது நின்னேடு உடன் பிறந்ததன்றே' என்று கோவலன் கண்ணகியைப் பாராட்டுகிருன். பொது வாக ஞாயிறு ஆண்மைக்கும் திங்கள் பெண்மைக்கும் உருக் குறியீடுகளாக (symbols) விளங்குகின்றன. உலக இலக்கியங் களில் பொதுவாகவும் தமிழ் இலக்கியத்தில் சிறப்பாகவும் இதனைக் காணலாம்.

**மதியமும்**
**காலக் கணிப்பும்**

முற்காலத்தில் தமிழர்கள் நாள், மாதம், ஆண்டுக் கணக்குகளை மதியத்தைக்கொண்டே கணித்து அறிந்தனர். வடவரை வென்று திரும்பிய செங்குட்டுவன் கங்கையாற்றங் கரையில் வெற்றிச் சிறப்புடன் தங்கியிருந்தான். அப்போது ஒருநாள் மாலைப்பொழுதில் அந்திச் செவ்வானத்தில் வளர் பிறையை ஏறிட்டுப் பார்த்தனன். உடனே பெருங்கணி எழுந்துநின்று 'வஞ்சிநகர் விட்டுப் புறப்பட்டு **முப்பத்து இரண்டு மதியங்களாயின**' எனக் குறிப்பிட்டனன். அஃதாவது முப்பத்து மூன்ருவது முழுமதி தோன்ற

இருப்பதனுல் முப்பத்திரண்டு மாதங்கள் முடிவுற்றன என்பது இதன் குறிப்பு.

அந்திச் செக்கர் வெண்பிறை தோன்றப்
பிறை ஏர் வண்ணம் பெருந்தகை நோக்க
இறையோன் செவ்வியிற் கணிஎழுந்து உரைப்போன்
எண்ணான்கு **மதியம்** வஞ்சி நீங்கியது
மண்ணாள் வேந்தே வாழ்க என்று ஏத்த

(27:146-150)

வளர்பிறை, தேய்பிறை நாட்களை 'நான்காம் பக்கல், ஐந்தாம் பக்கல்' எனப் பக்கமாகவும், இரு பக்கமும் சேர்ந்ததில் ஒரே ஒரு முழுமதி தோன்றுதலால் அதனை ஒரு மதியம் (மாதம்) அல்லது திங்கள் என்றும் தமிழர் கணக்கிட்டனர். ஒவ்வொரு வளர்பிறையும் இக்காலக் கணிப்பிற்கு உதவுதலாலும் அதனைக் காணுதலும், தொழுதலும் வழக்காருயின எனக் கருதவும் இடமுண்டு.

## பிறை தொழும் பெண்கள்

இத்தகைய பிறை மதியின் சிறப்புக்கள் பலவற்றையும் அறிந்து, மக்களனைவரும் அதனைத் தொன்று தொட்டுத் தொழுதுவந்துள்ளனர். இவர்களுள்ளும் மகளிரே பிறை தொழும் வழக்கம் மிகுதியும் உடையராக இருந்தனர் என் பதற்கும் மகளிருள்ளும் கன்னியரே பிறை தொழுதலைச் சிறந்ததொரு நோன்பும் வழிபாடும் கொண்டாட்டமுமாகக் கொண்டிருந்தனர் என்பதற்கும் போதிய சான்றுகள் உள. **குட முதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்** (193) என்பது மதுரைக் காஞ்சி. மேலைத்திசை அடிவானத்தே தோன்றித் தொன்று தொட்டுத் தொழப்பட்டு வரும் பிறை என்பதனுல் இப்பிறை தொழும் வழக்காறு சங்ககாலத்

திலேயே தொன்றுதொட்டு வருவதாகக் கருதப்பட்டதென்பது போதரும். வளர்பிறை போல **வழிவழிச் சிறக்க நின் வலம்படு கொற்றம்** எனவும் (மதுரை : 194) '**வளர்பிறை போல வழிவழிப் பெருகி**' எனவும் (குறு : 289) வருமிடங்களால் செல்வச் செழிப்பு, வாழ்க்கை முன்னேற்றம் படிப்படியான வளர்ச்சி போன்றவற்றின் நற்சின்னமாகவும் இது விளங்கியமை பெறப்படும்.

தலைவன் நெடுநாட் பிரிந்து வாராமையால், ஆற்ருமை மீக் கூர்ந்த தலைவி தோழியிடம் தன் வருத்தத்தைப் புலப் படுத்துகின்ருள்:

> வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
> செவ்வாய் வானத்து ஐ எனத் தோன்றி
> **இன்னம் பிறந்தன்று பிறையே**, அன்ஞே
> மறந்தனர் கொல்லோ தாமே...! (குறு:307)

ஒவ்வொரு மாதமாய்க் கழிந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு வளர்பிறைப் பக்கமும் தோன்றிக் கொண்டிருக்கிறது. தலைவன் தான் குறிப்பிட்ட மாதங்கள் பல கடந்தும் வந்திலன். இவ் ஏக்கமே இப்பாடற் கருத்தாக அமைந்துள்ளது. இன்ருயின் நாட்காட்டியைப் பார்த்து வருந்துவர்; முன்பு பிறையைப் பார்த்து: இன்னும் ஒரு பிறை வந்ததே என வருந்தினுள். 'சங்கினை உடைத்தாற்போன்ற வெள்ளிய பிறை நிலவு செவ் வானத்தின்கண் அழகுறத் தோன்றியுளது'. அதனைப் பார்த்ததும் இன்னமும் பிறை தோன்றிற்று ; மேலும் ஒரு மதியம் தொடங்கிற்று எனத் தலைவி வருந்துகிருள். அன்று வானமே, நாட்காட்டி - வளர்பிறை, தேய்பிறைகளே நாட் குறியீடுகள் !

வளர் பிறையை மாதத்தின் முற்பகுதியாகவும் முழுமதி நாளை (பௌர்ணமி) நடுநாளாகவும் தேய்பிறையைப் பிற்பகுதி

யாகவும் தமிழர்கள் கொண்டிருந்தனர் என்று தோன்றுகிறது. இதன்படி அமாவாசை மாத இறுதிநாள். அதற்கு அடுத்த நாள் மாதம் தொடங்குகிறது. ஆனால் முதல் இரு வளர்பிறை கண்ணுக்குப் புலனாகா. மூன்றாம் பிறையே புலனாகும். எனவே மாதத் தொடக்கத்தை இம்மூன்றாம் நாள் வளர் பிறை காட்டியது. அதனால்தான் 'பிறை ஏர் வண்ணத்தை'ச் செங்குட்டுவன் நோக்கியதும், பெருங்கணி 'வஞ்சி நகரம் நீங்கி முப்பத்திரண்டு மதியம் ஆயிற்று' என்கின்றான். குறுந் தொகைத் தலைவி பிறை கண்டதும், 'இன்னம் பிறந்தன்று பிறையே' என மாதம் மேலும் நீட்டிப்பதை எண்ணி அழு கின்றாள். 'பலர் தொழ' என்பதனால் மாதத் தொடக்கத்தைச் சுட்டும் இப்பிறையினை அனைவரும் காலக்கணிப்பு நினை வோடும் இயற்கையழகுக் காட்சியோடும் கடவுள் அருட் சிறப்போடும் உணர்ந்து தொழுதமை அறிய வருகின்றது.

சிறப்பாக மகளிரே பிறை தொழும் வழக்காறு மிகுதி யும் உடையராக விளங்கிவந்துள்ளனர். முற்காட்டியது போல

ஒள்ளிழை மகளிர் உயர் பிறை தொழூஉம்
புல்லென் மாலை. (அகம்: 239)

என அகநானூறு சுட்டுதல் காண்க. இதற்கு வதுவை யாகாத கன்னியர் பிறை தொழுதல் மரபு என்க என்று நாட்டார் ஐயா உரை விளக்கம் தருகின்றார். களவுக் காலத்தில் தலைவன் தலைவியைத் தேடிக்காணும் அருமையைக் குறிப்பிடவந்த தோழி, 'தேடிப் பார்த்துத் தொழுகின்ற மூன்றாம் பிறை போல'த் தாங்கள் தலைவன் சந்தித்தற்கு அருமையாக இருந்ததைக் கூறுகிறாள்.

தொழுதுகாண் பிறையில் தோன்றி யாம்நுமக்கு
அரியமாகிய காலை. (குறு: 178)

மூன்றும் வளர்பிறை சிறிதுபொழுதே தோன்றி மறைந்து விடும். அச்சிறு போதிலும் மேகங்களால் மறைக்கப்பட்டு விடும். எனவேதான், எப்போது தோன்றும் என்று எதிர் பார்த்துக் காத்திருந்து போற்றிக் காணும் பிறையாதலின் தொழுது காண் பிறை' எனச் சிறப்பிக்கப் படுகிறது. தொல் காப்பிய உரையில் பேராசிரியரும் இதன் காட்சி அருமையைச் சுட்டிக் காட்டுகிறார். அவர் இப்பாடலுக்குத்' 'தொழுது காண் பிறையில் தோன்றினம்' என்பது 'களவுக் காலத்து இடையீடு பெருகிற்று எனக் கூறியது', என விளக்கம் தரு கிறார். (தொல். மெய். 24) 'கன்னி மகளிரும் பிறரும் தொழுது காணுகின்ற பிறையைப் போலத் தோன்றி, நுமக்குக் காண்டற் கரியேமாகிய களவுக் காலத்தில்' என்றும் 'பிறை மூன்றும்நாட் சந்திரன். அது திங்களுக்கு ஒரு முறையே தோன்றுவதாகலின் காட்சி அருமைக்கு அதை உவமை கூறினாள்; கார்த்திகைப் பிறையுமாம்' என்றும் டாக்டர் உ.வே.சா. அவர்களின் உரை இதை விளக்குகிறது. தை, மாசிப் பிறைகளையே கன்னி மகளிர் சிறப்பாகத் தொழுதனர். இன்றும் மாசிப் பிறையிலேதான் ராவாண்டை கொண்டாடப் படுகிறது. தை மாதம் அறுவடையாகிச் செல்வம் கொழிக் கின்ற காலமாதலின், நல்ல கணவனைப் பெறும் நோன்பாகிய இதனைத் 'தை' அல்லது மாசியில் கொண்டாடியிருக்க வேண்டும் என்று கருதுதல் கூடும்.

**களவொழுக்கமும்**
**பிறைதொழுதலும்**

கன்னிப் பெண்கள் பிறை தொழுவார்கள்; நல்ல கணவனைப் பெற வேண்டுமென்று நோன்பு மேற்கொள் வார்கள். மனத்துக்குகந்த மணாளனைப் பெற்ற பிறகு இப் பிறை தொழுதலைக் கைவிட்டு விடுவார்கள். கன்னிப் பெண் பிறையை இரவிலே தொழுது எழுவாள்; கற்புடைப் பெண் கணவனுடன் உறைந்து, பணிவிடை செய்து எழுவாளே

யன்றிப் பிற கன்னியருடன் கூடிப் பிறை தொழமாட்டாள். பிறை தொழுதல் திருவள்ளுவருக்கும் சங்க காலத்திற்கும் மிகமிக முற்பட்ட வழக்காருகத் தோன்றுகிறது. சங்கப் பாடலிலேயே 'தொன்று தொழு பிறை' என்றல்லவா வருகிறது! தொல்காப்பியத்திலும் இக் குறிப்பு உண்டு என உய்த்துணரத் தக்கதாக இருக்கிறது.

களவொழுக்கம் என்பது யாருக்கும் தெரியாமல்-தோழிக்கும் தெரியாத வகையில்-தலைவி தலைவனைக் காதலிப்பதாகும். இவ்வொழுக்கம் உண்டு என ஐயுறும் தோழி முதன் முதலில் இவ்வுண்மையை வெளிப்படுத்தி அறியப் பல முயற்சிகளை மேற்கொள்வாள். தலைவியினுடைய தோற்றம், மணம், ஒழுக்கம், உணவுண்ணுதல் போன்றவற்றில் ஏற்படும் மாற்றத்தை வைத்து ஊகித்தறிவாள். தன் செயல்களை மறைத்தல், ஒரு திசையையே நோக்கிச் செல்லுதல், ஓரிடத்திலேயே சுற்றிச்சுற்றி வருதல்,புணர்ச்சி விருப்பம் தோன்றும் மெய்ப்பாடுபோல்வனவற்ருல் தலைவி உள்ளத்தே நிகழும் உணர்ச்சி நிலைகளை உய்த்துணர்ந்து இவளுக்குக் களவில் கூட்டமுண்டு என அறிந்து கொள்வாள். பிறகு மெய்யாகவும் பொய்யாகவும் ஐயப்படத்தக்கதாகப் பல்வேறு செய்திகளைக் கூறி அதைத் தலைவி எவ்விதம் ஏற்கிருள் எனக் கண்டும் உண்மை அறிவாள். இதனைத் தொல்காப்பியர்,

நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பாடு உள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத்தானும்...'

(தொல். களவு:24)

என வகைப்படுத்துவார். இவற்றுள் 'பல்வேறு கவர்பொருள் நாட்டம்', என்பதற்கு விளக்கம் கூறவந்த நச்சினர்க்கினியர் 'பிறை தொழுவாம்' என்று தலைவியிடம் தோழிகூறி உண்மை அறிவாள் எனக் காட்டியுள்ளார். அஃதாவது இதுநாள்வரை 'பிறை தொழுவாம்' என்றவுடன் ஆயத்தாருடன் கூடிப் பிறை தொழ-ராவாண்டை கும்பிட-ஓடிவரும் தலைவி, இன்று சற்றுப் பின்னடைந்து 'பிறை தொழாது' நிற்பதைக் காண்பாள். மனத்தினுல் யாரையோ காதலனுக வரித்து விட்டதனுல், இங்ஙனம் தயங்குகிருள் என அறிந்து தலைவி யின் களவொழுக்கத்தைக் கண்டுபிடித்து விடுவாள் தோழி. எனவே கன்னிப் பெண்கள் பிறைதொழுதல் என்பது மிகவும் தொன்றுதொட்டுவரும் வழக்கம் ஆகும். கற்புடைய மகளிர் பிறை தொழாது கணவனைத் தொழுது எழுதல் என்ற வழக் காறு இப்பிறை தொழுதல் சடங்கு காரணமாக ஏற்பட்டதே தவிரப் பிறிதின்று. பாடல்களில் 'புலனெறி வழக்கம்' எனப் படும் இலக்கிய மரபு அடிப்படையில் பிறை தொழுகென்றல் என்ற கூற்று அகத்திணைப் பாடல்களில் மிகுதியாக இடம் பெற்று வந்திருக்கிறது.

> முன்னும் தொழத்தோன்றி முள்எயிற்ருய் அத்திசையே
> இன்னும் தொழத்தோன்றிற்று ஈதே காண்! —மண்ணும்
> பொருகளிமால் யானைப் புகார்க்கிள்ளி பூண்போல்
> பெருகொளியான் மிக்க பிறை.

இது தோழி தலைவியை நோக்கிக் கூறியது; 'நாம் முன் பெல்லாம் தொழுமாறு தோன்றும் பிறை இப்போதும் அதே திசையில் தோன்றியுளது. சோழ மன்னனின் யானைக் கணிந்த பூண்போல் விளங்கும் மிக்க ஒளியினையுடைய இப் பிறையைப் பார்!' இதைக் கேட்கும் தலைவி பிறை தொழாதிருப்பாளானுல் அவளுக்குக் களவொழுக்கம் உண்டென்று தோழி உணர்ந்து கொள்வாள். நம்பியகப் பொருளில் இது ஒழுக்கம் என்றே குறிப்பிடப்படுகிறது. ஒழுக்கமாவது தெய்வம்

தொழாமை முதலாயின என்று அதன் உரை விளக்கத்திலும் குறிப்பிடப்படுகின்றது. இதனைப் பின்பற்றி அனைத்துக் கோவை நூல்களிலும் பிறை தொழுகென்றல் என்ற கூற்று இடம் பெறுகிறது.

திளைக்கும் திரைமேல் உனக்குமுன் தோன்றலின் செம்பொன்வெற்பை
வளைக்கும் பிரான்முடி வைகுதலால் தஞ்சைவாணன் மண்மேல்
விளைக்கும் புகழ்போல் விளங்குதலால் செக்கர் விண்பிறைகார்
தளைக்கும் குழல்திருவே தொழவேதகும் தன்மையதே.
(தஞ்சை வாணன் கோவை;64)

'முகிலைக் கட்டிவைத்தது போன்ற கூந்தலையுடையாய்! பாற்கடலில் உனக்குமுன் தோன்றியதென்பதாலும்,சிவனுரின் திருமுடிமேல் வைகுவதென்பதாலும் தஞ்சைவாணன் புகழ்போல ஒளிவீசுவதாலும் செவ்வானத்தே தோன்றும் பிறைதொழத் தகுந்த தன்மையுடையதாகும்'. இங்ஙனம் தோழி கூறியும் தலைவி தொழாதிருப்பதனுல் அவளது களவொழுக்கம் அறியப்படும். அல்லாமல் தோழியுடன் தலைவியும் பிறை தொழு-வாளானல் ஒழுக்கத்தில் எவ்வித டாற்றமும் இல்லையென்பது பெறப்படும்.

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில், வரைந்து எய்திய பின் தலைமகளிடத்து நிகழும் மெய்ப்பாடுகளைக் குறிப்பிடும் பொழுது 'தெய்வம் அஞ்சல், புரையறந் தெளிதல்' முதலிய பத்து மெய்ப்பாடுகளைக் குறிப்பிடுகிருர். இவற்றுள் முதலாவதான 'தெய்வம் அஞ்சல்' என்பதற்கு 'மணமானவள் பிறை முதலிய பிற தெய்வங்களைத் தொழ அஞ்சுதல்' என்றே பொருள் கொள்ளலாம். அடுத்துத் தலைமகள் இல்லறத்தின் மேலான கடமைகளை அறிதலைப் 'புரையறந் தெளிதல்' எனச்

சுட்டுகின்ருராதலின் முன்னதற்கு அதுவே பொருளாதல் வேண்டும்.

கன்னியர் பிறை தொழுதல் தமக்கு நல்ல கணவன் வாய்க்க வேண்டும் என்பதற்கேயன்றே? அத்தகைய காதலன் வாய்த்தபின் அவர்கள் மீண்டும் பிறைதொழக் காரணம் இல்லை. செல்வமாயின் மீட்டும் மீட்டும் வேண்ட வாய்ப்புளது; கணவன் வாய்த்தபின், கற்புடையாட்கு மீட்டும் அதனை வேண்ட வாய்ப்பு எங்கே உளது? கணவன் வேண்டுமென வழி படும் பிறைதொழுதல், அது வாய்த்தபின் முடிவுறவேண்டிய தாயிற்று. எனவே **பிறை தொழாமை** பற்றிய இந்நுட்பம் **மகளிரின் கற்புச் சிறப்பாய்ப்** போற்றப்பட்டமை தமிழர் நாகரிகத்தின் வழிப்பட்ட செய்தியாகும்.

**குறிஞ்சிக்கலி தரும்**
**விளக்கம்**

களவொழுக்கம் குறிஞ்சித்திணைப் பாடல்களில் சிறப் பாகப் புனையப்படுகிறது. கபிலர் குறிஞ்சிக் கலியில் தரும் ஒரு காதலோவியம் இவண் பயன்படுவதாகும். ஒரு பெண்ணை ஆற்று வெள்ளம் அடித்துக் கொண்டு போக இருந்தபொழுது ஒரு வீரன் அவ் ஆற்றிற் குதித்து அவளைக் காப்பாற்றினன். தன்னைத் தொட்டுக் காப்பாற்றியவனைத் தலைவி மனத்தினல் காதலித்துவிட்டாள். அவனையே கணவனுகக் கருதும் நிலை யில் இப்போதெல்லாம் அவள் பிறை தொழுவதில்லை; காதல ஞகிய அக்கணவனையே தொழுது எழுகின்ருள். இக்கற்புடை மையால் அறம் நிலைபெறுகிறது. இதனல் அவளது தந்தை தமையன்மார் தொடுத்த அம்பு பிழைப்பதில்லை; குறி தவறுவ தில்லை. எனவே ''சிறுகுடியீரே! அவள் தன் மனத்தினல் ஏற்றுக் கொண்டவனுக்கே மணம் முடித்துவையுங்கள். இன்றேல் உங்கள் மலைநாட்டின்கண் வள்ளி ஆனது கிழங்கு வைக்காது, மலைமேல் உள்ள தேன் கூடு கட்டாது; கொல்லை யில் தினை விளையாது, எனத் தோழி **அறத்தொடு நிற்கின்ருள்.**

காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்
வாங்கமை மென்தோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலால் தம்மையரும்
தாம்பிழையார் தாம்தொடுத்த கோல். 39

காந்தட் பூ மணக்கும் மலையின்கண் வளர்ந்த மூங்கில்போலும் குறவரது இளம் மகளிர் தம் கணவரைத் தப்பாராய், அவரையே தெய்வம் என்று தொழுது எழுந்திருத்தலால், அவர்தம் ஐயன்மார் தாமும் தாம் தொடுத்த அம்புகள் இலக்குத் தப்பாராய் ஆயினர். இங்ஙனம் பிறை தொழாமை கற்புடைமையாகப் பெருமைப்படுத்தப்படுகிறது.

### திருக்குறளும்
### தமிழர் நாகரிக மரபும்

தமிழர் நாகரிகமும் பண்பாடும் விளங்க எழுந்த உலகப் பொதுமறை நூலே திருக்குறளாகும். வாழ்க்கைத் துணை நலத்தில் கீழ்க்கண்ட குறள் இடம் பெறுகிறது.

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. (55)

இதற்கு 'பிற தெய்வம் தொழாது தன் தெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள் பெய்யென்று சொல்ல மழை பெய்யும்' என உரை கூறுவர். தமிழ் மகளிரின் ராவாண்டை போடும் மரபு வழியாகவும் நினைந்து பார்ப்பின் இக்குறட்பொருள் மேலும் தெளிவுபடும். இதில் தெய்வம் தொழுதல் என்பது பிறை தொழுதலையே குறிப்பிடுகிறது. தொல்காப்பியர் 'தெய்வம் அஞ்சல்' எனக் குறிப்பிடுவதும் இதனோடு ஒப்பிடற்பாலது. சங்க நூல்களில், முன்பு எடுத்துக் காட்டிய மேற்கோள்களில் தொன்று தொழு பிறை (மதுரை:

193); பலர் தொழ (குறு:307); உயர்பிறை தொழூஉம் (அகம்:239) தொழுது காண் பிறையில் (குறு:178) என்று பிறை தொழுதல் (கையெடுத்துக் கும்பிடுதல்) குறிப்பிடப் படுதலைக் கண்டோம். இடைக்கால நூல்களிலிருந்து முன்பு எடுத்துக்காட்டிய சான்றுகளிலும் 'இன்னும் தொழத் தோன்றிற்று; 'தொழவே தகும்' எனத் தொழுதல் தொடர் களே தொடர்ந்து வந்துள. கோவை நூல்களில் பிறை தொழு கென்றல் என்பதோர் துறையுண்டு என்றும் முன்பு எடுத்துக் காட்டப்பட்டது. இம்மரபின்படி அமைந்ததே தெய்வம் தொழா அள் என்பதுமாகும். பிறை வழிபாடு முதலியன சிறு தெய்வ வழிபாடுகளாதலின் யாவும் உளப்படத் 'தெய்வம் தொழாஅள்' என்றூராயினும், **பிறை தொழு தலையே** இது சிறப்பாகக் குறிக்கும் என்பது முற்காட்டிய எடுத்துக்காட்டுகளால் புலனுகும். எனவே **பிறை தொழாமல் கணவனைத் தொழுது எழுபவள்** அஃதாவது **கற்பு நெறி பொற்புற இல்லறம் விரும்புபவள்** பெய் என்றூல் மழை கூடப் பெய்யும் என்பது இக்குறட்கருத்தாகும். பிறை தொழுபவள் ஒருவனை மனத்தால் வரித்ததுமே அதனை நிறுத்தி விடுகிறூள். அவளது கற்புடைமை அங்கே முகிழ்க்கிறது. இதனூல்தான் பிறை தொழாமைக்கும் — தெய்வம் தொழா மைக்கும் — கற்புடைமைக்கும் பெரிய முடிச்சு ஏற்பட்டு, அது இலக்கியங்களிலும் இடம் பெறுவதாயிற்று.

மகளிரே கூடி நிகழ்த்தும் பிறை தொழுதல், வண்டல் அயர்தல் (சிறுவீடு கட்டி விளையாடுதல்); கொப்பி கொட்டுதல்; காமன் வழிபாடு; பாவை நோன்பு என்பன பலவுள. இவை யெல்லாம் கன்னியர் தம் ஆடல் பாடல்களோடு கூடிய 'நோன்பு'களாக வளர்ச்சி பெற்றவை. சமுதாய வழக்காய்த் தோன்றிச் சமய நெறிமுறைகளாகியவை. திருமணமான வர்கள் கணவனையே தெய்வம் என்று கருதித் தொழுது எழ வேண்டுமே தவிர, இரவு நேரத்தில் முற்கூறிய நோன்புகளில் ஈடுபட்டுத் தெய்வம் தொழுது எழுதல் கூடாது. கணவனைத்

தொழுது எழுதல் என்பது குறியீட்டுப் பொருளுடையது. அது கணவனுடன் உடனுறைந்து எழுதல், கணவனையே தெய்வ மெனப் போற்றுதல், அவன் ஏவல் வழி நிற்றல் முதலிய கற்புடை மகளிர் செயல்களைக் குறிக்கும். வெறுமனே கை யெடுத்துக் கும்பிடுதலை மட்டும் குறிப்பதன்று.

'தெய்வம் தொழாது கொழுநனைத் தொழுது எழுவாள் என்பதில் ஒரு சிக்கல் இருக்கிறது. எழுந்த பிறகல்லவா தொழ வேண்டும்? தொழுதபின் எழுதல் எவ்வாறு கூடும்? 'தொழுது எழுவாள்' — 'தொழுது கொண்டே எழுவாள்' என்பது எவ்வாறு பொருந்தும்? இவற்றைப் பற்றி முன் னோரும் சிந்தித்துள்ளனர்.

பரிமேலழகர் தொழாநின்று என்பது தொழுது எனத் திரிந்து நின்றது (அஃதாவது தொழுது கொண்டே எழுதல்) என்றும் தெய்வம் தொழுதற்கு மனம் தெளிவது துயில் எழுங் காலத்தாகலின் 'தொழுதெழுவாள்' என்றார்' என்றும் விளக்க முற்படுகிறார். திருக்கோவையாரில் குறிஞ்சி நிலக் கன்னி யரினது ஒரு நாள் நிகழ்ச்சிகள் நிரல்படக் கூறப்படுகின்றன. பகலில் தினைகாத்து, மலையெதிரே எதிரொலி கூவி விளையாட் டயர்ந்து, சிற்றில் இழைத்து, மாலையில் சுனையாடி, மலர் கொய்து, இரவில் பிறை தொழுது எழுதல் எனத் தொகுத் துரைக்கப்படுகின்றன.

*தினைவளம் காத்துச், சிலம்பு எதிர் கூஉய்ச்;*
*சிற்றில் முற்றிழைத்துச்,*
*சுனைவளம் பாய்ந்து, துணைமலர் கொய்து,*
*தொழுது எழுவார்...*

என்பது அத்திருப் பாடலின் முற்பகுதி. பிரயோக விவேகத்தில் 'கொழுநற் றொழுதெழுவாள்', 'தொழுது எழு வார் வினைவள நீறெழ' என்னும் திருவள்ளுவரினும் திருக் கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் 'தொழா நின்றெழுவாள்', 'தொழாநின்றெழுவார்' என எச்சத்திரி

பாய் உரைப்பார். எழுதல் துயிலொழிதலாகலின் 'எழுந்து தொழுவாள்' 'எழுந்து தொழுவார்' என முன் பின்னுகப் பொருள்படுதலின்றி, 'நகுபு வந்தான்' 'ஓடி வந்தான்'என்பன போலத் தொழாநின்று துயில் எழுதல் கூடாதென்க', என்று முற்கூறிய பரிமேலழகர் விளக்கம் மறுக்கப்படுகிறது.

பிறை தொழுதலுடன் இது தொடர்புடையது என அறியின்இச்சிக்கல்களுக்கு எல்லாம் இடமில்லை.ஆற்ருெழுக்குப் போலக் கிடந்தவாறே பொருள் கொள்ளலாம். சமுதாய வழக்காற்றை மறந்ததனுலேயே உரையாசிரியர்கள் இடர்ப் படுகின்றனர். என்றும் கன்னியாயிருந்து பிறை தொழுது எழுதலினுல் பயன் யாது? கருத்திற்குகந்த கணவனை அடைந்து அவனைத் தொழுது எழுகின்றவள் கற்பின் செல்வி யாவாள். இத்தொடர்புபட நினைந்தாலன்றித் 'தெய்வம் தொழாஅள்' என்ற குறட்கருத்து விளங்காது இடர்ப்படவே நேரும். 'கொழுநற்ருெழுதெழுதல்' என்ற இத்தொடர் 'பிறை தொழுதல்' வழக்காற்றினுல் வந்ததேயாகும் என்பது தெளிவு.மேலும் பிறைதொழுகென்றல்ஓர் இலக்கியமரபு ஆகிய நிலையில், அதன் சமுதாய மரபும் வழக்காறும் அதற்கு மிகமிக முற்பட்ட காலத்ததாகல் வேண்டும் என்பது உறுதி. இங்ஙனம் நோக்குகிற பொழுது பிறை தொழுதலாகிய ஒரு சமுதாய வழக்காறும் பிறைதொழுகென்றல் என்ற ஓர் இலக்கிய மரபும் அவற்றினடிப்படையிலான கற்பு நெறியாகிய ஓர் அறமும் நமக்கு நன்கு தெளிவுறுகின்றன. இன்றும் 'ராவாண்டை போடுதல்' என்ற பெயரால் ஒள்ளிழைமகளிர் பலரும் உயர்பிறை தொழுகின்றனர் என அறியும்போது இம் மரபுத் தொடர்ச்சி இடையறவுபடாமையை நினைந்து நினைந்து வியப்பெய்துகிருேம்!

**அகநானூறும்**
**கொப்பி கொட்டுதலும்**

ராவாண்டை இறுதிநாள் நிகழ்ச்சிக்குப்பின் அதற்கென களிமண்ணுற் பிடித்து வைத்தவற்றைப் புலர்காலைப்

பொழுதில் நீர் நிலையில் கொண்டு சென்று கரைத்து விடுவ ரென்றும் அதற்குக் கொப்பி கொட்டுதல் என்று பெயரென்றும் முன்னர்க் குறிப்பிடப் பெற்றது. தை மாதத்தில் மாட்டுப் பொங்கலுக்கு மறு நாள் இந்நிகழ்ச்சி உண்டென்பதும் முன்னரே சுட்டிக் காட்டப்பட்டது.

பிறை தொழுதல் போல் வண்டல் அயர்தலும் (சிற்றி லிழைத்தல்) கொப்பி கொட்டுதலும் கன்னிப் பெண்களுக்குரிய ஆட்ட பாட்டங்களாகவே இருந்து வந்துள்ளன. அக நானூற்றுப் பாடல் ஒன்றில் 'வண்டலயரும்' பெண்கள், நீர்த் துறையிலே அவற்றைக் கொண்டு போய் விடுத்துக் குரவை அயரும் செய்தி கூறப்படுகிறது. முன்னர் எடுத்துக்காட்டிய வாறு கொப்பி கொட்டும் பெண்கள் நீர்த்துறையிலே, பிள்ளை யார் கோவில் முன்பு சிற்றிலிழைத்தற் பொருள்களாகிய களி மண் பொம்மைகளடங்கிய கூடையை வைத்து விட்டுச் சுற்றி நின்று கொப்பி கொட்டிப் பிறகு அதனை நீரில் விடுத்துவரும் செய்தி, இவ் அகநானூற்றுச் செய்தியுடன் - வண்டல் அயர் தலுடன்-பெரிதும் ஒற்றுமையாக இருப்பது இவண் எடுத்துக் காட்டத்தக்கதாகும்.

தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்
பொலங்காசு நிரைத்த கோடேந்து அல்குல்
நலங்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்
பாடூர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து
வயிரிடைப் பட்ட தெள்விளி இயம்ப
வண்டற் பாவை உண்துறைத் தரீஇத்
திருநுதல் மகளிர் குரவை அயரும்

(அகம்:269)

'தைமாதத்தில் குளிர்மிகுந்த மழை பொழியும் இறுதி நாட் களில், காசுமணிகள் கோத்த மேகலை யணிந்த இடையில்

பூங்கொத்துக்களோடு கூடிய தழையுடை அசைய, ஓசை எழும் வாய்வட்டத்தையுடைய ஊது கொம்பின் இசை முழங்க, வண்டல் விளையாட்டிற்குரிய பாவையை நீருண்ணும் குளக் கரையில் கொண்டுவந்து வைத்து, அழகிய நெற்றியினை யுடைய மகளிர் குரவைக் கூத்தாடுவர்'. தை மாதத்தில், வண்டற் பாவையை ஊது கொம்பு முழங்கக் குளக்கரைக்கு எடுத்துவந்து வைத்துக் குரவை அயர்ந்த அகநானூற்று மகளிர் போலவே, இன்றையச் செட்டி நாட்டுப் பெண்கள் தைமாதத் தொடக்கத்தில்-தை மூன்றும் நாள் சங்கு முழங்கக் கொப்பியை எடுத்துச் சென்று, குளக்கரையில் வைத்துக் கொப்பி கொட்டிப் பின்பு அதனைக் குளத்தில் விடுத்து வருகின்றனர். பழைய குரவை அயர்தற்கும் புதிய கொப்பி கொட்டுதற்கும் ஒற்றுமையிருக்கிறது. இந் நிகழ்ச்சிகள் முன்பு ஒரே அடிப்படையில் மகளிரிடையே முகிழ்த்த வழக் காறுகள் என எண்ண இடம் தருகின்றன.

### கலித்தொகையும்
### கன்னிப் பெண்கள் நோன்பும்

கன்னிமகளிரின் **வண்டல் அயர்தலாகிய பாவை விளையாட்டும் தைந்நீராடலும் திருவாதிரை நோன்பும்** போல்வன சிறந்த கணவரைப் பெறுவதற்கே எனக் குறிஞ்சிக் கலிப்பாடல் ஒன்றும் விளக்குகிறது. இவ் ஆடல் பாடல்களின் நிமித்தம் சமைந்த பெண்கள் தெருவில் புறப்பட, இளைஞர்கள் கண்டு மனத்திற்கு உகந்தவளைத் தேர்ந்து கொள்ளும் வாய்ப் புண்டாயிற்றுப் போலும். இங்ஙனம் தோன்றிய சமுதாய வழக்குப் பிறகு சமயவழக்காகும் — நோன்பாய் — நல்ல கணவரைப் பெறுதலின் நிமித்தம் கொண்டாடப்படுவதாயிற்று எனலாம். இக்கலிப்பாடலில் தலைவன் தலைவியின் மீது கொண்ட காதலால் அவளைத் தன்விருப்பத்திற்கு இசையுமாறு இரந்து நிற்கிறான். அவளோ பாராமுகமாகச் செல்கிறாள். அப்போது அவன், '**நீ நல்ல கணவனைப் பெற** நோன்புபல

செய்கிருய். ஆனுல் என்னைப் புறக்கணிக்கின்ருயே; இதனுல் நீ செய்யும் தவத்தின் பயன் கிடைக்காமற் போகுமே', எனக் கூறிக் கெஞ்சுகிருன். அப்பாடலின் கொளுவில், 'இஃது இரந்து குறையுற்றுப் பின்னின்ற தலைவன் ஆற்ருனுய்த் தலைவியை நோக்கி இங்ஙனம் வருத்துவையாயின் நீ செய் தவம் இன்ரும் எனக் கூறியது' எனக் குறிப்பிட்டிருப்பதிலிருந்து இதை அறியலாம். அவள் இங்ஙனம் செய்யும் நோன்புகளை அவன் மூன்று தாழிசைகளிலும் நிரல்படத் தொகுத்துக் கூறுகிருன். அவை **பாவை விளையாட்டு, தைந்நீராடல், திருவாதிரை** என்பனவாகும்.

**பாவை விளையாட்டு**

பாவை விளையாட்டிற்கும் (வண்டல் என்றும் ஓரை என்றும் சங்க நூல்களில் இடம பெறும்) பாவை நோன்பிற்கும் தொடர்புண்டு. ஒரு பெண் சிற்றில் இழைத்து விளையாடுகிருள். அதில் சிறு முத்தனைப் பெற்று வளர்ப்பதாகக்கொண்டு அவனுக்குச் சிறு சோறு சமைத்து ஊட்டுவதாகக்கொண்டு, ஆயத்தாரோடு மகிழ்கிருள். இவள் கோலம் தீட்டிய பானையும் பாவையும் எடுத்துக் கொண்டு சிலம்பு ஆரவாரிக்க விளையாடச் செல்கின்ருள்:

> சுடர்விரி வினைவாய்ந்த **தூதையும் பாவையும்**
> **விளையாட** அரிபெய்த அழகமை புனைவினை
> ஆய்சிலம்பு எழுந்தார்ப்ப அம்சில இயலும்நின்
> பின்னுவிட்டு இருளிய ஐம்பால்கண்டு என்பால
> என்னைவிட்டு இகத்தர இறந்தீவாய் கேள்இனி...
> **சிறு முத்தனைப்** பேணிச் **சிறு** சோறு மடுத்துநீ
> நறுநுதலவரொடு **நக்கது**நன்கியைவதோ? (கலி:59)

நீ இங்ஙனம் விளையாடிய நோன்பின் பயன் உனக்கு நன்கு இயையுமோ?' என்று கேட்பதிலிருந்து, இதனை ஆடலாக மட்டுமன்றி நோன்பாகவும் கருதிய பெருமை புலனுகும்.

தைந்நீராடல்

வைஎயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையில் நீராடிய தவம் தலைப் படுவாயோ.

தோழியரோடு கூடித் தலைவி தை மாதத்தில் நீராடுவதைத் தவம் என்று இது சுட்டுகிறது. பரிபாடலில் இது **அம்பா ஆடல்** எனச் சுட்டப் படுகிறது. பதினொன்றும் வையைப் பரிபாடலில் நல்லந்துவனார் இதை மிக விரிவாக எடுத்துரைக்கிறார்:

கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்க
பனிப்படு பைதல் விதலைப் பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பின்குளத்து
மாஇருந் திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க
புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப
வெம்பா தாக வியல்நில வரைப்பு என
அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்ட
பனிப் புலர்பு ஆடி பருமணல் அருவியின்
ஊதை ஊர்தர உறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கு அழல் பேணிய சிறப்பின்
தையல் மகளிர் ஈர் அணி புலர்த்தர
வையை! நினக்கு மடைவாய்த் தன்று!
மையாடல் ஆடல் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாடல் ஆடும் புணர்ப்பின் அவர் அவர்
தீ எரிப் பாலும் செறிதவம் முன்பற்றியோ
தாய் அருகா நின்று தவத் தைந்நீர் ஆடுதல்
நீ உரைத்தி வையை நதி!

இதன்படி மார்கழி மாதம் திருவாதிரை நாளாகிய பௌர்ணமி தொடங்கி, தை மாதப் பௌர்ணமி முடிய இந் நோன்பு முன்பு நடைபெற்றதென அறிகிறோம். வையை ஆற்றில் புலர்காலைப் போதில் முனிவர் குல முதல்வியர் சடங்குமுறை காட்ட, தாய் அருகே நிற்கக் கன்னியர் அம்பா ஆடுவர். தைந்நீராடும் தவம் இவ்வாறு விரித்துரைக்கப் படுகிறது. வராகமிகிரரின் காலத்திற்குப்பிறகு, காலக் கணிப்பில் ஏற்பட்ட வேறுபாட்டால் ஒவ்வொரு மாத நிகழ்ச்சி யும் முன்னைய மாதத்திற்குப் போய்விட்டதை நாம் காண் கிறோம். அதனால் தைந் நீராடல் மார்கழி நோன்பாகி விட்டது[1].

செட்டி நாட்டில் ஐப்பசி மாதத்தில் நீராடுதலை 'முழுக்கு' என்ற பெயரால் குறிப்பிட்டு, அயலூர்களில் 'தீர்த்தங்கள்' உள்ள இடம்தோறும் சென்று முழுகிவருவர். தலை முழுக்கு கடை முழுக்கு என்றெல்லாம் வகைப்படுத்தியும் கூறுவர். இங்குவரும் தைந்நீராடல் இன்று பொதுப்பட மார்கழி நீராடலாகி இருப்பதை அறிகிறோம். திருப்பாவை, திரு வெம்பாவையில் இந்நீராடலும் பாவை நோன்பும் இணைந்து சமயச்சார்பு பெற்றிருப்பதையும் காண்கிறோம். இக்கலித் தாழிசையில் காதலன் தன்னைப் புறக்கணித்து நிற்கும் தலைவி யிடம் 'தைநீராடித் தவம் செய்து நல்ல கணவனைப் பெற, நோற்ற நீ அந்நோன்பின் பயன்போல வந்துற்ற என்னைப் புறக்கணிக்கின்றாயே? அத்தவத்தின் பயனை இனி எங்ஙனம் எய்துவாய்?' என நயமாக வினவுகின்றான். திருவெம்பாவையில் 'அன்னவரே எம்கணவர் ஆவார்' என்றும் 'எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேறற்க' என்றும் வரும் குறிப்பு கள் பாவை நோன்பிலும் இக்குறிக்கோள் இருப்பதை உணர்த்தும். இவ்வுலகில் நல்ல தலைவனைப் பெறவந்த பாவை நோன்பும் நீராடலும் 'உலக முதல்வனும் தலைவனை'ப் பெறும்

1. இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள பின்னிணைப்புக் கட்டுரை யையும் காண்க.

ஆன்மாவின் நோன்பாகப் பிறகு வளர்ந்தமையக் காண் கிறோம்.

**திருவாதிரை**

அடுத்த தாழிசையில் வரும் செய்தி :

**பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ**
**எய்திய பலர்க்கீந்த பயம்பயக்கிற்பதோ?**

நச்சினார்க்கினியர் இதற்கு, 'நோன்பாகிய விளையாட்டினை (பொய்தல்) உடைய மகளாம் தன்மை உடையையாய்ப் பிறர் மனையின் கண்ணே ஐயம் ஏற்றுப் பாடிநீ ஆண்டுப் பெற்றவை யிற்றைப் பிறர்க்குக் கொடுத்ததனாலுள்ள பயன் நினக்குப் பயன் தருவதொன்றோ? தாராது காண்!' என்று உரை விளக்கம் எழுதியுள்ளார். கன்னிப் பெண்கள் வீடுதோறும் விளையாட்டாகப் பிச்சை ஏற்றுப் பிறர்க்குக் கொடுத்து நோன்பு நோற்பர் என்றும் அதன் பயன் சிறந்த கணவரைப் பெறுதல் என்றும் இதனாலறியலாம். இதுவே செட்டிநாட்டு மண மாகாத, வயது வந்த பெண்களுக்குத் 'திருவாதிரை' என்ற சிறப்பு நிகழ்ச்சியாக அண்மைக் காலம்வரை நடைபெற்று வந்தது. இது மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும். இதன்கண் 'திருவாதிரை செய்யப்படும்' வயது வந்த பலபெண்கள் குழுவாகப் பாடிக்கொண்டு வீடு வீடாகச் செல்வர்.

ஆடிஆடி வாரோம் அவரைக்காய் போடுங்க!
பாடிப்பாடி வாரோம் பாடவரங்காய் போடுங்க!
கூடிக்கூடி வாரோம் கொத்தவரங்காய் போடுங்க!

என்று பாடுவர். 'திருமணத்திற்கு உரிய பருவமடைந்த பெண்களை விளம்பரப்படுத்தும் நிகழ்ச்சியாகத் திருவாதிரை அமைந்ததுபோலும்' என்பர் சோமலெ அவர்கள் (செட்டி நாடும் தமிழும் பக்:39). எங்ஙனமாயினும் 'பொய்தல (விளை யாட்டு) மகளாய்' பிறர் மனையிலே பாடி, எய்தியவற்றைப் பிறர்க்கு ஈகின்ற' இது மார்கழி மாதம் திருவாதிரையின் போது ஒரு சடங்காகக் கொண்டாடிவரப் பெற்றமை அறியத்

தக்கது. இன்றையத் திருவாதிரையிலும் விளையாட்டாகப் பிச்சை ஏற்கவே இங்ஙனம் பாடிச் செல்வர். இப்பாடல்கள் எல்லாம் சிற்சில தொடர்களைத் தவிரக் கிடைத்தில. மணிமேகலை அமுத சுரபி பெற்று ஆதிரையிடம் பிச்சை ஏற்றதற்கும் இதற்கும் ஏதும் தொடர்புண்டோ என்பதும் ஆராயத்தக்கது.

## நாச்சியார் திருமொழியும் காமன் வழிபாடும்

மாசிப் பிறை தொழும் வழிபாடு இடைக்காலத்தில் காமன் வழிபாடாகக் கருதப் பெற்றது என்பதற்கு நாச்சியார் திருமொழி இடம் தருகிறது. இராவாண்டையில் கிழவன், கிழவி எனக் களிமண்ணால் பிடித்துவைக்கப்படுபவர் காமனும் இரதியும் என்பர் சிலர். நாச்சியார் திருமொழியின்படி அனங்க தேவனை நல்ல கணவனைப் பெறுவதற்காக மகளிர் தொழும் நோன்பு மாசி மாதத்தின் முற்பகுதியில் கொண்டாடப்படுவதாகும். தை மாதம் முழுதும் வீட்டைத் தூய்மைப்படுத்தித் தரையை மெழுகி அழகுபடுத்துகிறார்கள். மாசி முன் நாட்களில் மிக நுண்ணிய மணல்கொண்டு தெருவிற் பரப்புகிறார்கள். இங்ஙனமெல்லாம் செய்து காமனையும் காமனின் தம்பியையும் வணங்குகிறார்கள். மகளிரின் இவ்வழிபாட்டைத் தாம் மேற்கொண்டதாகக் கூறி நாச்சியார் 'வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே' என்று கேட்கிற காட்சி இனிய முறையிலமைந்தது:

தைஒரு திங்களும் தரைவிளக்கித்
தண் மண்டலமிட்டு மாசி முன்னாள்
ஐயநுண் மணல்கொண்டு தெருஅணிந்து
அழகினுக்கு அலங்கரித்து அனங்கதேவா
உய்யவும் ஆம்கொலோ? என்றுசொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்

வெய்யதோர் தழல்உமிழ் சக்கரக்கை
வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே

(நா. திருமொழி:1)

இவ்வாறு கன்னியர்க்கு உரியனவாகிய பற்பல நோன்புகள் மார்கழி, தை, மாசி மாதங்களை ஒட்டி நிகழ்ந்துவருகின்றன. காலத் தொன்மை மிகமிக இவை தை மாதத்தை ஒட்டியன வாய் இருந்தமை புலப்படுகிறது. இடைக் காலத்தும் பிற் காலத்தும் இவை முன்னைய மார்கழியை அல்லது பின்னைய மாசியைத் தழுவி நிற்கின்றன.

மார்கழி : பாவை நோன்பு, திருவாதிரை நோன்பு.

தை : கொப்பி கொட்டுதல், நீராடல், தைப் பாவை அல்லது வண்டல் விளையாட்டு (ஓரை)

மாசி : பிறை தொழுதல்

இவை அனைத்தும் முதற்கண் நல்ல கணவனைப் பெறும் நோன்புகளாகவே விளங்கின. பிறகு இவற்றுள் சில பிள்ளை வரமும் செல்வமும் நல்வாழ்வும் வேண்டுவனவாக மாறின. ராவாண்டைப் பாடலின் இறுதியில் இவ்வரங்கள் பலவேண்டப் படுவதை இன்று காண்கிறோம். மார்கழிப்பாவை நோன்பு ஆன்மா இறைவன் மீது கொண்ட காதலை விளக்கும் நோன் பாக வளர்ந்தமைந்தது. திருப்பாவை, திருவெம்பாவை என்ற இரண்டு இலக்கியச் செல்வங்கள் இவ். இறைமைக் காதலுலகின் அனுபவங்களாக வெளிப்பட்டுள்ளன. இவ்வாறு நம் மகளிரின் வாய்மொழி இலக்கியம் நமது தாய்மொழி இலக்கியத்திற்கும் சிறப்புத் தேடித் தந்துள்ளது.

# நிலவும் பாடலின் இலக்கியத் தரம்

முன்பு தாலாட்டு, காதல் வாழ்வு என இருநூல்கள் வாய்மொழி இலக்கியத் தொகுப்புகளாக என்னால் வெளியிடப் பெற்றன. அந்நூல்களின் முன்னுரைகளில் அப்பாடல்களின் இலக்கியத் தரத்தை யான் மதிப்பீடு செய்து தந்ததுண்டு. இதனால் தாலாட்டைப் படித்த கவிஞர் கண்ணதாசன் **எங்கள் தாய்வீட்டுச் சொத்து** என்று தென்றலில் விரிவான மதிப்புரைக் கட்டுரையொன்றை எழுதினார். ஆனந்த விகடன் **எனக்குப் பிடித்த புத்தகம்** என்ற மதிப்புரை வரிசையில், இத் தாலாட்டு நூலுக்குச் சிறப்பான கட்டுரை ஒன்றை வெளியிட்டது. இவ்வாறே இந்நூல்களின் அடிப்படையில் பலரும் கட்டுரைகள் எழுதினர்; கருத்து வேறுபாடுகளையும் தெரிவித்தனர்; பாராட்டுரைகளையும் குவித்தனர்.

தமிழில் திரைப்பாடல்கள் பலவும் முற்கூறிய நாட்டுப்புறப் பாடல் அடிகளை எடுத்துத் தாராளமாகப் பயன்படுத்திக் கொண்டன:

மாம்பழத்தைக் கீறி வயலுக்கு உரம்போட்டுத்
தேன்பாய்ந்து நெல்விளையும் செல்வமுள்ளார் புத்திரனோ?
எவயை பெருகிவர வார்ந்தமணல் ஊர்ந்துவர
ஊர்ந்துவந்த தண்ணியிலே ஒட்டிவந்த
கட்டிமுத்தோ?
அழுதா அரும்புதிரும் அண்ணாந்தால் பொன்னுதிரும்
சிரிச்சா முத்துதிரும் தம்பி வாய்திறந்தால்
தேன்சிதறும்

கண்ணே கமலப்பூ கண்ணிரண்டும் தாமரைப்பூ
ஏன் பிறந்தாய் செல்லமுத்தே—என்வயிறுதான்தேடி

இப்படியே எத்தனையோ அடிகளை இத்திரைப் பாடல்கள் தம்மதாக்கிக்கொண்டு சிறப்புற்றன. சொற்கள், தொடர்கள் கருத்துகள் என ஆராய்ந்தால் யான் தொகுத்த தாலாட்டுப் பாடல்களின் தாக்கத்தை, இக் காலத் திரைப்படப் பாடல்களில் கண்டு தனி ஆய்வுரையாகவே எழுதலாம். பாலில் பழந் தூங்க, பாதி நிலாத் தான் தூங்க எனத் தொகுக்கப் பட்ட வாய்மொழிப் பாடற்கருத்து ஒன்றுமட்டும் பல்வேறு வடிவங்களில் இடம் பெற்றுள்ளதை இத் திரைப்பாக்களில் காணலாம்.

'இராவாண்டைப் பாடல்' என்ற இந்நிலவுப் பாட்டின் இலக்கியத் தரமும் முன்னையவற்றிற்குச் சற்றும் குறைந்த தன்று. இப் பாடல்களைத் தொகுப்பதில் எனக்கு உதவியாக இருந்தவர்கள் என் குடும்பத்தார். அவர்களால்தான் பொன்னமராபதி-புதுப்பட்டிப் பக்கத்துப் பாடல் சில கிடைத்தன. இது பற்றிய சடங்குகள் பலவும் அவர்களால் எனக்கு விளக்கப் பட்டன. கரைக்குடியில் ஓரிருமுறை அவர்கள் எனக்காக ராவாண்டை போடுமிடங்கட்குச் சென்றுவந்தனர். காரைக்குடி மீனாட்சி சுந்தரேசுவரர் உயர்நிலைப் பள்ளியில் என்னிடம் படித்த மாணாக்கியர்கள் பலர் அப்பகுதித் தாலாட்டுப் பாக்கள் பலவற்றை தங்கள் தாய்மார்களிடமிருந்து கேட்டு, எழுதிவந்தபோது, இந்த ராவாண்டைப் பாட்டு அடிகளையும் எழுதி வந்து தந்தனர். தேவகோட்டைப் பாட்டுகளை உதவியவர் அவ்வூர் நண்பர் திரு. பழநியப்பன் ஆவார்.

இவற்றைத் தொகுத்து, விளக்கம் எழுதிவைத்தும் வெளியிடப் பல ஆண்டுகள் ஓடிவிட்டன. மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் சேர்ந்த அண்மையில் யான் இப் பாடல்களை ஆய்வதையும் ஒரு பணியாக எடுத்துக்கொண்டு, இதன் பதிப்பிற்கான விளக்கக் குறிப்புகள், ஆய்வுரை ஆகியவற்றை எழுதி முடித்தேன்.

எத்தனை ஆண்டுகளாயினும் இதன் இலக்கியச் சிறப்பு போற்றத்தக்கதாக இருப்பதனால்தான், இன்று வெளியிடப் படுகின்றது. 'ராவாண்டை' போடுவதால் எடுத்த காரியம் யாவினும் வெற்றி வாய்க்கும் என்பது இன்றைய நம்பிக்கை யாகும். அது கருதியும் இதனை வெளியிடுவதும், படிப்பதும், ஆய்வதும்கூட 'வெற்றி வாய்ப்பை' நல்குமெனக் குறிப்பிடுவது மிகையாகப்படும். என்றாலும் மிகையான நம்பிக்கைகளில் தான் நம் சமுதாயம் பின்னிப் பிணைந்து கிடக்கிறது.

பேராசிரியர் வி. ரட்லவ் (V. Radlov) என்பார் மத்திய ஆசியக் கண்டத்தில் வாழும் தார்த்தாரியர்களின் (TartarS) வாய்மொழிப் பாடல்களை நேரில் கேட்டுப் படிஎடுத்துத் தொகுத்து ஆராய்ந்தார். வாய் மொழிப் பாடல்களின் யாப் பியலை முதன் முறையாக உருவாக்கித் தந்த பெருமை இவரைச் சாரும். பாடகர்க்கும் கேட்போருக்கும் உள்ள உறவுபற்றியும் இவ்வகை நாட்டுப் பாடல்கள் பாடப்பெறும் சமூக விழாக்கள் பற்றியும் இவர் ஆராய்ந்தார். நாட்டுப் பாடல்களைப் பகுத்து, வகைப்படுத்தி அவற்றின் வடிவ அமைப்பு, உறுப்புகள், நடை வேறுபாடு அனைத்தையும் துருவி ஆராய்ந்தார்.

எழுத்து வடிவ இலக்கியம் எத்தனை முறை எடுத்துரைத் தாலும் ஒரு 'பாட'மாகவே இருக்கும். வாய்மொழி இலக்கியத் திலோ ஒருமுறை பாடப்பெறுவதுபோலவே மறுமுறை அமைவதில்லை. வாய்மொழிப் பாடகன் அவ்வாறு மாற்றி மாற்றிப் பாடும் திறனுடையவன்; நினைவிலிருப்பவற்றைக் கொண்டு, மறந்துபோன இடங்களைப் புதிய—பொருந்திய தொடர்களால் நிரப்பிவிடவல்லவன். சோர்வு தோன்றும விருக்கவும், ஒரே மாதிரியாகவிருக்கும் சுவையின்மை யை (Monotonous) அகற்றவும் சிறிது சிறிது மாற்றித் திரித்து மறுகோலம் செய்வதும் அவன் வழக்கம்.

போடுங்கள் எல்லோரும் பொன்னும் திருக்குலவை

போடுங்கடி பெண்டுகளா பொன்னும் திருக்குலவை

போடுங்கள் எல்லோரும் பொன்னுய் ஒருகுலவை

இவ்வாறு இப்பாடலில் வரும் வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டலாம். தொடர்களோ, சொற்களோ, அடைமொழி களோ இதுபோல் உடனுக்குடன் மாறி அமைகின்றன. ஒரு வரே அடுத்தடுத்துப் பாடினாலும், ஒவ்வொரு முறை பாடும் போதும் பாடல் அடியோ, தொடரோ மாறிவிடுகின்றன. 'பட்டுவிலை மதிப்பாள் பகுசியுள்ள கோட்டையம்மா' என்று தேவகோட்டைப் பெண் பாடுகிறாள்; காரைக்குடி மாதரசி 'பட்டுவிலை மதிப்பா பகுசியுள்ள கொப்பாத்தாள்' என்று மாற்றிப் பாடுகிறாள். பொன்னமராபதிபுதுப்பட்டிப் பெண்ணோ மகிமையுள்ள மாம்பழத்தாள் என்று பின்னைய பகுதியை மாற்றிவிடுவாள். இவ்வாறு அந்தந்த ஊர்ப்பெண் தெய்வம் அவ்வப் பாடலில் இடம் பெறுகிறது. இவற்றில் சேராதவள், பொதுவாக 'பட்டுவிலை மதிக்கும் சீமை பதினாறு தேசமெங்கும்' என்றும் பாடுகிறாள்.

கதையாகக் கூறுதல், விரித்துப்புனைதல், நுட்பமாகக் கண்டு கூறுதல் என்பன நாட்டுப்பாட்டின் இயல்புகளாகும். 'தம்பி அழுத கண்ணீர் ஆறாகப் பெருகி ஆனை குளிப்பாட்டிக் குளமாகப் பெருகிக் குதிரை குளிப்பாட்டிப் பாயுமெ'ன்ற தாலாட்டுக் கற்பனை சில மாற்றத்துடன் இங்கும் இடம்பெறு கிறது. மாடப் புறாவை மாயக் குறத்தி மகன் வழி மறித்துக் கண்ணி கட்டினான். அதனால் அப்பறவை சிறகிரண்டும் பறவடிக்கக் கண்ணீரைப் பொழிந்தது. அக்கண்ணீராகிய ஆறுபெருகி ஆனை குளிப்பாட்டிப் பள்ளம் பெருகிப் பாலர் விளையாடினார்களாம்!

இங்ஙனம் அடைமொழியை, பெயரை,அடியை,தொடர் களை, கருத்தை, கற்பனையைக் காலம் இடத்திற்குத் தகத் திரும்பத் திரும்பப் பயன்படுத்தும் பேராற்றலை வாய்மொழிப் பாடகர்கள் நெடுநாட் பழக்கத்தால் இயல்பாகப் பெற்றிருந் தனர். இவற்றைப் **படைப்பாக்கக் கூறுகள்** (Elements of Froduction) என ரட்லவ் அழைத்தார். **இத்தொடராக்க அமைப்புகள்** (Formula) சேமிப்புத் தொடர்களாக அல்லது ஆயத்த உறுப்புகளாகக் கருதப்பட்டன. இவை மரபு வழி யாகப் பயன்படுத்தப்பட்டு பல்வேறு நிலையில் — யாப்பு அமைதிக்கேற்ப இணைந்து நின்றமை **வாய்மொழித் தொட ரியல்மைப்பு** (System of formula) எனப்பட்டது. வேண்டும் போது முன் ஆய்த்தமின்றிப் பாடுதல், திடீரெனப் புதியன புகுத்துதல் போல்வன **ஆயத்த ஆற்றல்** (Improvisation) எனப்படும். அப்போது பழைய தொடர்ப் பகுதிகட்குப் புதிய பகுதிகளை இணைத்து ஓசையும் சந்தமும் யாப்பும் குன்றாமல் பாடிவிடும் ஆய்த்த ஆற்றல் பாடகர்க்கு உண்டு. அங்ஙனம் அமையும் புதிய பகுதிகள் **இணைத் தொடர்கள்** (Substitutes) எனப்பட்டன.

பேராசிரியர் எச். எம். சாட்விக்கு 'இலக்கிய வளர்ச்சி' (The Growth of Literature) என்ற தமது நூலில் வாய் மொழிப் பாடல்களினால் எழுத்துவடிவ இலக்கியம் உருவாகும் சிறப்பை நன்கு விளக்கியுள்ளார். கிரேக்கக் காப்பியங்களின் அடிப்படை, வளர்ச்சிபற்றிச் சிறப்பாக மில்மன் பரி அவர்களும் (Millman Parry), பௌரா அவர்களும் (C.M. Bowra) செய் துள்ள ஆய்வுகள் போற்றத் தக்கன. தமிழகத்திலும், இலங்கை யிலும், தென்னிந்திய மொழிகளிலும் வழங்கும் நாட்டுப் பாடல்களைத் தேடித் தொகுக்கவும், அவற்றை ஒப்பிட்டு ஆராயவும் ரட்லவ், மில்மன்பரி போன்ற சான்றோர் இங்குத் தோன்றாதது நம் தவக்குறைவேயாகும்.

'இராவாண்டைப்' பாடலின்கண் நிலாவைப்பற்றிய கற்பனை எவ்வெவ்விதமாகவெல்லாம் இடம் பெற்றுள்ளது என்று

கண்டால், பொங்கிவரும் அருவிபோலப் பூத்துக்குலுங்கிவரும் கற்பனை நாட்டுப்பாடல்களின் இயல்பாக இருப்பதை அறியலாம்.

நிலாவின் வளைகோடுபோன்ற அரைவட்டத்தோற்றம் அகல் விளக்குப்போல இருக்கிறது. வெண்கலத்தைக் கீறி வைத்ததுபோன்ற தோற்றம், அவ்விளக்கின் தோற்றம்! விளக்கு நிரம்ப நெய்வார்த்து விளக்கெது, சுடரெது என்று தோற்ருதவாறு ஏற்றி வைத்திருக்கிறது. 'கரிக்கரிவாள் போலக் கண்திறக்கும் நிலாவாத்தாள்'என்னும்போது நிலா முக ஓவியம் நம்நேர்வந்து காட்சிதருகிறது. இமை மூடித் தவம் செய்யும் போதினிலே சிறிதே திறந்த விழிபோல, வளைந்த நிலாவைக் 'கண் திறக்கும்' என்று சுட்டியிருப்பது, தீட்டியதோர் சொற்சித்திரமாகும்! இதனை ஒட்டிப் பிறந்தனவே 'கண் குளிரப் பார்ப்பாளாம் காட்சியுள்ள ராவாத்தாள்'என்றும்'இமை குளிரப் பார்ப்பாளாம் நீதியுள்ள ராவாத்தாள்' என்றும் வரும் தொடர்கள் எனலாம். பார்த்த அவளின் கண் குளிர்ந்திருந்ததனுல் பார்வை பெற்ற உலகமும் குளிர்ச்சி பெற்றுவிட்டது. 'நீ நயந்து நோக்கும் வாய் பொன் பூப்ப' என்பது போலத் தண்மதி நோக்கிய உலகமும் தண்மை பெற்றுத் தழைக்கின்றது.

**நாவன்மை**

**வேண்டுதல்**

இராவாண்டைப் பாடல் ஒரு பேரிலக்கியமாகக் கருதப்படும் அளவு மிகுதியான பாடல்களை உடையதாக வழங்கி இருக்கவேண்டும். இங்குக் கிடைத்துள்ள பாடல் மிகக்குறிப்பிட்ட அளவினதே. இச்சிறிய பகுதியிலேயே நாம் காணக்கூடிய இலக்கிய நுட்பங்கள்,நயங்கள் பலவாகும்.பேராசிரியர் ரெனி வெல்லாக்கும் ஆஸ்டின்வாரனும் தமது 'இலக்கியக் கொள்கையில் குறிப்பிடுவது போல, பல இலக்கிய வகை

கள் (Genres), அடிக்கருத்துகள் போல்வன நாட்டுப் பாடல் களிலிருந்து முகிழ்த்து இலக்கியத்திற்கு ஏறியுள்ளன; மேலும் இலக்கிய வளர்ச்சியை ஆராயவும், இலக்கிய வகைகளையும் அவற்றில் கையாளப்படும் உத்திகளையும் ஆராயவும் வேண்டின் நாட்டுப் பாடற்கல்வி இன்றியமையாத தாகும்.

வாய்மொழிப் பாடகி முன் ஆயத்தமின்றிப் பாட வேண்டியவளாக இருத்தலின், தான் நாவெடுக்கும் நேர மெல்லாம் இறைவன் வந்து உதவவேண்டும் என்று வேண்டு கிறாள். எடுத்த காரியம் இனிது முடிதற்பொருட்டு இறைவனை வணங்கித் தொடங்குதல் தமிழ் நூலுடையார்க்கு மரபு. இம் மரபுப்படியும் ராவாண்டை பாடும் ஒருபெண், பகலெல்லாம் ஒளிதந்த இறைவனை, இரவில் வேண்டிநின்று பாடுகிறாள்.

பகபக சூரியரே
பகலெல்லாம் தக்காத்தவரே!
நருளைப் படைத்தவரே
நானையா உன்னடிமை!
நாவெடுத்த நேரமெல்லாம்
நானடியாள் சோம்பாமல்
நாக்குத் தவறுமே
நன்றுக்கும், குன்றுமே
சேதி தவறுமே
செந்நாக்கும் குன்றுமே
திக்காமல் தாருமையா
சிந்தா மணிநாக்கை!
கூசாமல் தாருமையா
கோல மணிநாக்கை!!

ஒரு சமயம் பார்த்தால் நீலவானிலே, கோலவிண்மீன் குவியல்களுக்கிடையே கிடக்கும் பிறைநிலா, இராவாண்டைக் கன்னிக்குக் கொட்டிக் கிடக்கும் மலர்கள் போலக் காட்சி தரு கிறது. 'தும்பைப் பூவைத் தூற்றிவிட்டது போலவும்'; 'கொன் றைப்பூவைக் கொட்டிவைத்தது போலவும்'; 'ஆவரம் பூவை அள்ளிவிட்டது போலவும்', 'மல்லிகைப் பூ மலர்வதுபோலவும்' நிலாவாத்தாள் விளங்குகிற காட்சியே காட்சி!

வளைந்த கதிர் அறுக்கும் அரிவாளை, உலகத்தார் கருக் கரிவாள், வாங்கரிவாள் (வாங்கு—வளைந்த) வெட்டரிவாள் என்றெல்லாம் அழைக்கின்றனர். இவ் அரிவாள் போலக் கண் திறந்து, வட்டம் சேர்ந்து, வெளிச் செரிக்கின்றது பிறை நிலா! ஒரே கருத்தைத் திரும்பத் திரும்ப, வெவ்வேறு வகையில் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிய தாழிசைபோலப் பாடுகின்ற முறை(Refrain Song)நாட்டுப்பாடல்களின் இயல்பு களுள் ஒன்று.

கருக்கரிவாள் போலே
கண்திறக்கும் நிலாவாத்தாள்
வாங்கரிவாள் போலே
வட்டம் சேர்ந்த நிலாவாத்தாள்
வெட்டரிவாள் போலே
வெளிச்செரிக்கும் நிலாவாத்தாள்

செய்தி ஒன்றுதான் என்றாலும் சொல்லும் முறையால் வேறு படுகிறது. கலித்தாழிசைகளோடு இவை ஒப்பிடத்தக்கன.

தோள்நலம் உண்டு துறக்கப்பட்டோர்
வேள்நீர் உண்ட குடையோரன்னர்

நல்குநர் புரிந்து நலன்உணப்பட்டோர்
அல்குநர் போகிய ஊர் ஓரன்னர்

கூடினர் புரிந்து குணன் உணைப்பட்டோர்
சூடினர் இட்ட பூ ஓரன்னர் (கலி:23)

கீழ்வரும் இராவாண்டைப் பாடல்களை இவற்ருேடு ஒப்பிட்டு நோக்குங்கள்:

தங்கச் சுளகெடுத்துத்
    தரளம் கொழிக்கும் ஆதாளி
பொன்னும் சுளகெடுத்துப்
    பூக்கொழிக்கும் ஆதாளி
வெள்ளிச் சுளகெடுத்து
    விளையாடும் ஆதாளி
பட்டச் சுளகெடுத்து
    மதுக்கொழிக்கும் ஆதாளி

இராவாண்டையில் சிறுவீடுகட்டிச் சுளகெடுத்துக் கொழித்து விளையாடும் ஆரவாரம் இது!வெண்ணிற நிலா நீலவானத்தில் பால் நிலவைப் பொழிவதால் பச்சை வண்ணத்தில் பால் தளும்பித் தோய்ந்ததுபோல இருக்கிறது. ஒருபெண் தலையில் பாற்குடம் வைத்துக்கொண்டு போகிறபொழுது, பால்தளும்பி விட்டதாகவும் அது அவள் உடுத்தியிருந்த பச்சைப்பட்டு முழுவதும் வடிந்து, தோய்ந்துவிட்டதாகவும் கதைப்போக்கில் கற்பனை நடைபோடுகிறது. இங்ஙனம் நாட்டுப்பாடல்களின் எல்லாச் சிறப்பியல்புகளையும் கொண்டு விளங்குகிற இப்பாடல் இன்றையப் புதுமைக் கவிஞர்களும் போற்றிப் பாராட்டத் தக்கதெனலாம்.

தங்கவண்ணம் கொய்துடுத்தித்
    தயிரு தலையில் வைத்துத்
தயிரு தளும்பித்
    தங்கவண்ணம் தோய்ந்ததென்ன?

பச்சைவண்ணம் கொய்துடுத்திப்
பாலு தலையில் வைத்துப்
பாலு தளும்பிப்
பச்சைவண்ணம் தோய்ந்ததென்ன?

முத்துவண்ணம் கொய்துடுத்தி
மோரு தலையில்வைத்து
மோரு தளும்பி
முத்துவண்ணம் தோய்ந்ததென்ன?

நீல வானையும் அதில் பொங்கித் தளும்பும் நிலவொளியையும் இதைவிடக் கற்பனை செய்ய முடியுமா என்ன? இங்ஙனம் ஒப்பிட்டு நோக்குகிற பொழுதுதான் கலித்தாழிசைகளுக்கும் நாட்டுப்பாடல் அமைப்புக்கும் உள்ள ஒற்றுமை புலனாகிறது. தாழிசையின் நீர்மையும் சீர்மையும் யாப்பியலும் நாட்டுப்பாடல் வழிப்பட்டன என்று அதன் தோற்றமும் வளர்ச்சியும்பற்றி அறிந்துகொள்ள இது இடமளிக்கிறது!.

மற்றுமொரு பிறை ஓவியம் பாருங்கள்! ஆல இலை போன்றது நீலவானம்; அதில் அன்னம் நீந்தி வருவதுபோல வருகிறது பிறைநிலா!

ஆல இலைதனிலே
அன்னந்தான் மேய்ந்தாற்போல்
ஆராய்ந்து எழுந்திருச்சு
வாராளே நிலாவாத்தாள்

தெய்வம் எங்கும் இருக்கும். இறைவன் தூணிலும் இருப்பான்; துரும்பிலும் இருப்பான் அன்றோ? நிலாவும் உலகத்தில் நீருள்ள இடம், பசுமையுள்ள இடம், ஒளியுள்ள இடம் எல்லாம் எதிரொளி தருகின்றது. இவை இரண்டும் இரு

வேறு பாடல்களில் நயம் பொருந்த எடுத்தாளப்பெற்றுள்ளன. முதலில் தெய்வக்காட்சி :

> தேரடிக் குள்ளிருப்பாள்
> தெய்வகுலக் கொப்பாத்தாள்
> கதவடிக் குள்ளிருப்பாள்
> காட்சியுள்ள கொப்பாத்தாள்
> நிலையடிக் குள்ளிருப்பாள்
> நீதியுள்ள கொப்பாத்தாள் .

இதுபோலவே இராவாத்தாளும் எங்கெங்கும் காட்சியளிப் பதைச் சுட்டிக் காட்டி அதன் இறைமைத் தன்மை நிறுவப்படு கிறது. பிறிதொரு பாடலில்:

> இஞ்சிக்கும் கீழே இருக்கிருள் நிலாவாத்தாள்
> மஞ்சளுக்கும் கீழே மறைகிருள் நிலாவாத்தாள்
> நச்சுக்கும் கீழே நடக்கிருள் நிலாவாத்தாள்
> பால்சட்டிக்கும் கீழே
> பதுங்குகிருள் நிலாவாத்தாள்
> நெய்ச்சட்டிக்கும் கீழே
> நிறக்கிருள் நிலாவாத்தாள்
> மோருக் குடத்தில்
> மிதக்கிருள் நிலாவாத்தாள்
> தண்ணீர்க் குடத்தில்
> தவழ்கிருள் நிலாவாத்தாள்

பதுங்குதல், நிறத்தல், மிதத்தல், தவழ்தல் என்ற வினைச் சொற்கள் நிலாவின் தன்மையைக் கற்பனைக் கண்ணுக்குப் புலனுக்க வல்லனவாகும். உள்ளே தெரிவதால் 'பதுங்குதல்' என்றும் ஒளிதருவதால் 'நிறத்தல்' என்றும், மேலே தெரிவ

தால்'மிதத்தல்'என்றும் மெல்ல ஊர்வதால் 'தவழ்தல்' என்றும் சுட்டியிருக்கும் அழகை நோக்கினல், சொல்லாட்சியால் கவிதை சிறக்கும் என்ற நுட்பம்-உத்திச் சிறப்புப் புலனுகும்.

**நிலவும் துகிலும்**

கலவிக் களியின் மயக்கத்தே
கலைபோய் அகல கலைமதியின்
நிலவைத் துகில்என்று எடுத்துடுப்பீர்!
நீள்பொற் கபாடம் திறமினே!

(க. பரணி - கடைதிறப்பு:14)

இவ்வடிகளில் சயங்கொண்டார் நிலவினைத் துகிலுக்கு உவமையாக்கி அதிலிருந்து ஒரு காதற் கற்பனையையும் பிறத்தித்தார். நிலவையே பாட்டுப் பொருளாக்கிக் கொண்ட ராவாண்டைப் பெண்களுக்கு இக்கற்பனை ஒரு தொடர் கற்பனையாகவே வாய்க்கிறது. செண்பகத் திடலிலே பருத்தியை விதைக்கிருர்கள். அது ஊசிபோல் முளைக்கிறது. ஊமத்தங்காய் போல அவ்வளவு பருமனுகக் காய்க்கிறது. பாவலை போலப் பஞ்சு படர்கிறது; பாலாடை போலப் பறக்கிறது. மேலே, வெள்ளிப் பலகையிலிருந்து அம்மன் மெல்லிய தூலை நூற்கின்ருள்! இந்த நூலைச் சீமை முப்பத்தாறு தேசமெங்கும் விலை மதிக்குமாம். இந்நூலினல் நெய்த பட்டினைச் சீமை பதினறு தேசமும்,எண்பத்தாறு வட்டகையும் விலைமதிக்குமாம். உலகளாவிய துகிலல்லவா இது!

பட்டின் நயம்கண்டு உலகமே வியக்கிறது. எதனுல் இப்பட்டு இவ்வளவு அழகாக விளங்குகிறது? ராவாண்டைப் பெண்ணிற்கும் உண்மை புலனுகவில்லை.

அவள் கேட்கிருள்:

வெள்ளை நயமோ?
　　வெள்ளாவி நயமோ?
சேலை நயமோ?
　　சீமாட்டி கைநயமோ?
சலவை நயமோ?
　　சலவை செய்துவந்தான் கைநயமோ?
கொய்துடுத்துவாள் கொப்பாத்தாள்
　　கொடியாள் இடைநயமோ!

ஒவ்வொரு கேள்வியாகக் கேட்டுக்கொண்டே வந்து இறுதி, யில், 'இது பட்டின் நயமோ, சலவையின் நயமோ அன்று;' 'கொய்துடுத்தும் கொடியனையாளின் இடைநயத்தினாலே தான் அழகாயிருக்கிறது போலும்!' என்று முடிப்பது கற்பனைக்கே ஒரு முத்தாய்ப்பு வைத்ததுபோல விளங்குகிறது. இடையின் அழகு சேலைக்கு ஏறிற்றும்! தனக்கு அணிந்த அணிகலன்களைச் சீதை அழகுபெறச் செய்தாள் என்று கம்பர் கூறுவார். சீதையாம் திருமகள் தன் சிவந்த திருவடிகளாலே தானிருந்த தாமரையைச் சிவக்கச் செய்தாள் என்ற கம்பர் கூற்றைத்தான் இதற்கு ஒப்பிடக் கூடும். 'மொய் கொள் சீறடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த தையலாள்' என்பது அவரது திருவாக்கு. நிலவைத் துகிலாக்கிக் கொப்பாத்தாள் அதை உடுத்தியிருப்பதாகச் செய்த கற்பனை யும் இதற்கு நிகரானதேயன்றோ?

**ஒலிநயமும்**
**பொருள்நயமும்**

கவிதையில் வரும் பொருள் நயத்தோடு அதற்கேற்ற, ஒலிநயமும் இணைந்தியங்குவது மிகவும் சிறப்பாகும். சில இடங்களில் ஒலிநயத்திலேயே பொருட்சிறப்பும் ஒன்றி, ஒன்றுகிவிடுவதுண்டு. கம்பர் கோசல 'நாட்டுப்படலத்தில்' அந்நாட்டில் சிலம்பும் ஆரவார ஒலிகளைச் செவிப்புலனுக்க விழைகிறார்.

திணைச் சிலம்புவ தீம்சொல் இளங்கிளி;
நனைச் சிலம்புவ நாகிள வண்டு; பூம்
புனைச் சிலம்புவ புள்ளினம்; வள்ளியோர்
மனைச் சிலம்புவ மங்கல வள்ளையே

(பால. நாட்டு : 29)

'சிலம்புவ, சிலம்புவ' எனத் திரும்பத் திரும்ப வரும் ஒலி நம் செவிகளில் ரீங்காரமிடுவதனால்' அந்நாட்டுவளம் நம் செவிப் புலனுக்கப்படுகிறது. காட்சிப் பொருளாக்கும்போது கவிஞன் கருத்தில் ஆழ்கிறான்; செவிப் புலனுக்கும்போதோ கருத்துடன் ஒலியிணைப்பில் (Sound texture) மனம் தோய்கின்றான். பாரதி தாசன் அடிக்கடி இவ்வொலிச் சேர்க்கையில் மனம் ஈடு படுவதுண்டு.

'கரும்படியின் சாறுநிகர்' மொழியாளுடன் பேசும் கணவன் 'வரும்படி' பற்றிப் பேச்சுத் தொடங்கினான். அவளோ கண்டபடி இவ்வரும்படிக் கணக்கதனைப் பேசிவிட் டாள். அவனுக்குச் சினம் பொங்கி எழுந்தது.
இதுகண்டு அவள் கூறுகிறாள்:

அப்படியா அறியாத படியால் சொன்னேன்
அந்தமிழர் படிப்படியாய் முன்னேற்றத்தை
எப்படியா யினும்பெற்று விட்டால்மக்கள்
இப்படியே கீழ்ப்படியில் இரார்கள் அன்றோ?
மெய்ப்படிநம் அறிஞரின் சொற்படி நடந்தால்
மேற்படியார் செப்படி வித்தைபறக்கும்
முற்படில் ஆகாததுஉண்டோ? எப்படிக்கும்
முதற்படியாய்த் தமிழ்படிக்க வேண்டும் என்றாள்!

(குடும்ப விளக்கு: முதற்பகுதி)

வரும்படி படிப்படியாய், படிபடியாய் வளரும் காட்சியைச் சொற் சித்திரம், ஒலிச் சித்திரமாக்கிக் காட்டுவதைக் காண்கிறோம்! இத்திறன் வள்ளலார் பாடல்களிலும் காணப்படுவதை திருவருட்பாவால் அறியலாம். இதுபோலவே ராவாண்டை மகளிரும் கருத்துக்கேற்ற ஒலிநயம் காட்டுகின்றனர்.

இராவாண்டையில் வரும் 'மதுக்குடப்பாட்டில்' உள்ள ஒலிநயம் ஈடும் எடுப்பும் அற்று விளங்குகிறது. மதுக்குடப் பாட்டு என்பதற்கேற்ப 'மது, மது' என்ற சொல் திரும்பத் திரும்ப வருகிறது. மதுவை மேலும் மேலும் பருகிப்பருகிக் களிப்பதுபோலக் கவிதையும் இனிக்கிறது:

நீரு மதுக்குள்ளே
நிழலு மதுக்குள்ளே
நீராடும் பெண்கள்
தானு மதுக்குள்ளே
பொற்கரக மதுக்குள்ளே
பொற்றூணு மதுக்குள்ளே
போரானை கட்டிய
தும்பு மதுக்குள்ளே!

எல்லா மதுக்குள்ளே என்று தொனிக்கின்றது. நிலா நீர்ப் பொருள்களில் எல்லாம் தெரியும் என்பது பொருளாகின்றது.

### பிறையும் கதையும்

நாட்டுப் பாடல்களில் கதைக் கூறுள்ள பகுதிகள் (Narrative Elements) நிறைய இடம்பெறும். இன்று கிடைத்துள்ள இப்பாடல்களிலும் ஐந்தாறு இடங்களில் கதைப் போக்கு அமைந்து இலக்கியத்திற்கு அழகு தருகிறது. வேட்டையாடப் போவதுபற்றியும் 'பாரமுள்ள பன்றி'யாகிய

கேழலை வேட்டையாடுவது பற்றியும் ஒரு குறிப்புளது. (4); வேட்டையாடி வரும் வீரசூர ஐயன்மாரின் திறம் பேசப் படுகிறது (29); வீரத்தோடு கூடிய காதல்பற்றிய குறிப்பும் வருகிறது (30).

அக்கரையில் மைந்தனை ஒக்கல் எடுக்கிவரும் நிலா மகளின் அழகு ஒரு கதைக் குறிப்பாய் வருகிறது (10). சோற்றிலே கல் கிடந்ததாக இறைவன் சீற்றங்கொள்ளும் காட்சி தாலாட்டிற்போல இங்கும் இடம் பெறுகிறது (14). ராவாண்டையுடன் உரையாடலாக வரும் கதைக்குறிப்பில் திருமணம் சொல்லப்போகும் நிலவும்,அடை மழையில் பறவை கள் படும்பாடும் மிக அழகாகக் கற்பனை நயத்தோடு அமைந் துள்ளன. அம்மன் நூல் நூற்கும் காட்சியும் கதைபோலச் சுட்டப்படுகிறது (23). இவைபோல வரும் கதைக் கூறுகள் போற்றத் தக்கனவாய் ஆங்காங்கு உளவெனினும்சிலவற்றின் பொருளும் பின்னணியும் இன்று விளங்கவில்லை. இறுதியாக ராவாண்டைபோடும் விவரமும் விளக்கமும் அமைந்திருப்பது, இவ்வழிபாட்டினைப்பற்றி நாம் நன்கு உணர வழிவகுக்கிறது.

## இலக்கிய இன்பம்

பற்பல பகுதிகள் படிப்பவர்க்குக் கவிதை அனுபவத்தை முழுதும் ஊட்டவல்லனவாய் உள. பெருங்கவிஞர்களின் கற்பனை உளத்தோடு போட்டிபோடக் கூடிய அளவு சிறப்பு டையன என எண்ணலாம். அழகுணர்ச்சியும் இன்பமுமே இலக்கியப் பயன் எனில், ஒரு சிறந்த இலக்கியம் வாழ்க்கை யிலேதான் முகிழ்க்கின்றது எனில் அதற்குஎடுத்துக்காட்டாய்க் காட்டக் கூடியவற்றுள் 'ராவாண்டைப் பாட்டும்' ஒன்றாக நிற்கிறது.

ஒருசோட்டுப் பெண்கள்
ஓடிக் குலவையிட

மறுசோட்டுப் பெண்கள்
வந்து குலவையிடப்
போடுங்கள் எல்லோரும்
பொன்னுந் திருக்குலவை!

என்று குரவைக் கூத்தில் எதிரெதிராக மகளிர் ஓடியாடும் அழகு நன்கு சித்திரிக்கப்படுகிறது.

இயற்கை எவ்வாறு தழைத்துச் செழித்து எழில் தருகிறது தெரியுமா? காய்களும் உயிரினங்கள் போலவே தோன்றி உருண்டு திரண்டு வளர்கின்றன.

மாடு புனைந்துவர
மாதுளங்காய் கோலிவர
ஆடு புனைந்துவர
அவரைக்காய் கோலிவர
கோழி புனைந்துவர
கொவ்வைக்காய் கோலிவர

மரம் செடி கொடிகள் காய்க்கும் அழகு இதுவெனில், மலர்கள் பூத்துக் குலுங்கும் எழில் இதற்குக் குறைந்தது அல்லவே!

காலையிலே காலையிலே
கார்த்திகைப்பூ மாலையிட
நேரம்பட நேரம்பட
நெருஞ்சிப்பூ மாலையிட
பொழுதுபடப் பொழுதுபடப்
புளியம்பூ மாலையிட
அந்திபட அந்திபட
அவரம்பூ மாலையிட

என்று பூ மாலையிடும் இயற்கையழகு சொல்திறனோடு போற்றியுரைக்கப்படுகிறது.

பறவையைப் பாடும் 'புதுக்கவிஞர்' ஒருவர் அதன் அழகு, இரு சிறகுகள் முதலியன போலவே பாடலை இடம் விட்டு எழுதிப் பாடற்கருத்தைக் காட்சிப்படுத்த முயன்று இடர்ப்படுகின்ருர். ஆனல் ராவாண்டைப் பெண்ணே தனது சொற்களாலேயே சித்திரம் வரைந்து விடுகிருள். அம்மன் தேரேறி ஊர்வலம் வருகிருள். எப்படி வருகிருள்? முதலிலே யானை வருகிறது, பிறகு கரடி, ஒட்டகம் பறவை எல்லாம் வருகின்றன. அவை வருகின்ற காட்சியும், அம்மனின் திருக்காட்சியும் ஆறு பாடல்களில் (22) பதிந்துள்ளன. அவற்றுள் ஒன்று இது :-

யானை வாரதைப் பாருங்களே !
யானை அசைந்து வாரதைப் பாருங்களே !
யானைத் தடம்போலக் கோட்டையம்மன்
அட்டிகை மின்னலைப் பாருங்களேன் !

யானை வந்துதானே அம்மன் வரவேண்டும்; அம்மன் வந்த பிறகுதானே அட்டிகை தெரிய வேண்டும். பாடலமைப்பு இதை உணர்த்துகிறது. இன்னெரு பாடலில் அம்மனின் செந்நிறப்பட்டு மின்னொளி வீசுவதை எவ்வளவு அழகாகக் கற்பிக்கின்ருள் இச்சிறு பெண் என்பதற்கு இது சான்று :

பாகை பழுத்ததைப் பாருங்களே !
பாகை பக்கம் பழுத்ததைப் பாருங்களே !
பாகைப் பழம்போலக் கோட்டையம்மன்
பட்டு மின்னலைப் பாருங்களேன் !

பாகையின் பழம் பச்சைநிறமாக இருந்து, சிறிது சிறிதாகப் பக்கம் பழுத்துவரும். பச்சையிடையே தோன்றும் செந்நிறம் பட்டொளி வீசும். வண்ணப் பட்டாடையைக் கை வல்ல ஓவியனும் தீட்டிக்காட்டுவதென்பது இதைப்போல ஒருவேளை அமையுமே தவிர, இதைவிடச் சிறப்பாக அமையுமோ?

வேனிற்காலத்தில் வேப்பமரம் எவ்வாறு தழைத்துப் பூக்கின்றது என்பதை ஒருத்தி சொற்சித்திரமாக்க முயலும் காட்சியும் இதுபோன்றதேயாகும்.

வேப்பம் பூவும்
பூக்கப் பூக்க
வேப்பம் சருகும்
உதிர உதிர
வேப்பம் கொழுந்தும்
தழையத் தழைய
வேப்பமணிப் பொட்டலிலே...

என்று வேனிற்கால வளர்ச்சி குறிக்கப்படுகிறது.

தோழி தலைவியின் திருமணத்தை எண்ணி இறைவியைக் குறிப்பாக வேண்டுகிறாள். அதுபோழ்து அவள்,

''முத்தும் சிறுமுத்து
நூலும் சிறுநூலு
சிந்தாமைக் கோரடியோ
செல்வப்பெண்ணே ராவாத்தாள்''

என்று முத்தினை நூலிற் கோப்பதுபோல வாழ்வை அமைத்துத் தருமாறு — தனக்குப் பொருத்தமான மண உறவை உருவாக்கித் தருமாறு - கேட்கும் மென்மை உணரத்தக்கது. முத்துக்கேற்ற நூலில் சிந்தாமல் கோப்பதுபோல் கணவன் மனைவி உறவு கடவுளால் அமைத்துத்தரப்படவேண்டுமாம்.

இவ்வளவு அழகிய பாடலைப் படிக்கும்போது நிலவினால் பெறும் இன்பத்தை இலக்கியத்தினாலும் பெறுகின்றோம். நீலவானத்தில் எழில் முகம் காட்டியும், சிறு நெற்றியைக் காட்டியும் விளங்கும் நிலா, மகளிரோடு உடன்பிறந்தது

என்று போற்றப்படுகிறது. அதனை வரவேற்கும் ராவாண்டைப் பெண்,

> தெருக்கூட்டி மணற்பரப்பித்
> தென்னம்பாளை விரித்துணர்த்தித்
> தெருக்கிடக்கிற சிங்காரத்தைத்
> திரும்பிப்பாரடி ராவாத்தாள் !

எனச் செல்லமாக அழைக்கின்றாள். இந்த அழைப்பினை ஏற்கும் நிலா திரும்பிப் பார்க்கும்; அவள் பாடும் இன்னிசையைக் கேட்கும்; அவள் விருப்பத்தை நிறைவேற்றும் என்று நமக்கும் நம்பிக்கை பிறக்கிறது! அந்நிலவு அவள் நெற்றியில், முகத்தில், நெஞ்சத்தில், மஞ்சளில் அவளணிந்துள்ள அணிகளில், துகிலில் அவளது வாழ்வின் மங்கலத்தில் எல்லாம் இணைந்து இணைந்து ஒன்றிவிடுகின்றது. அவள் கற்பை உலகிற் குணர்த்தும் சின்னமாகி விடுகிறது.

இங்ஙனம் இயற்கையோடு ஒன்றி உருவாகி வளர்ந்த தமிழர்தம் நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் அதன் ஈராயிரம் ஆண்டு நிலைபேற்றிற்கும் ஒரு நினைவுச் சின்னம் ராவண்டைப் பாட்டு எனலாம். வரிவடிவ இலக்கியத்தோடு போட்டியிடும் இவ்வாய்மொழி இலக்கியமும் மகளிர் படைத்த—மகளிரின் வாழ்விற் பிறந்த—மகளிர் இலக்கியமே என்று கருதும்பொழுது, 'உலகக் கவிஞர்களையெல்லாம் உவந்தளித்த தாய்க்குலமே நீ வாழ்க!'' என்று சேய்களாகிய நமக்கு மனமுவந்து வாழ்த்தத்தோன்றுகிறது அல்லவா?

# இராவண்டைப் பாட்டு

(நிலாப் பாட்டு)

வாய்மொழிப் பாடலின் மூலமும்
விளக்கக் குறிப்பும்

# 1

## இமை குளிரப் பார்க்கின்ற பிறைத்தெய்வம்

மாசிப் பிறையில் அமர்ந்து நிலாவாத்தாள் என்ற பெண்தெய்வம் வான வீதியில் உலா வருகின்ருள். நிலவை நோக்கி மனிதன் உலாச்செல்லும் அறிவியற்காலம் இது. முன்பு நிலம், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐம்பெரும் பூதங்களையும், ஞாயிற்றையும் மதியையும் தெய்வம் எனப் போற்றி வழிபட்டனர். பேராற்றலுடைய இயற்கையை வழிபட்ட முறையும், கொற்றவை, காளி, கறுப்பன் முதலிய தெய்வ வழிபாட்டு முறையும் காலப்போக்கில் ஒன்றிஞென்று கலக்கலாயின; பிறையை நோக்கும்பொழுது அதில் 'நிலா வாத்தாள்' என்ற தெய்வம் இருப்பதாகக் கருதிவழிபட்டனர். தத்தம் ஊர்த் தெய்வமாகிய காளி, துர்க்கை முதலிய 'சக்தி' யினை இவர்கள் நிலவில் கண்டனர். எனவே மக்கள் மாசிப் பிறையைக் கண்டதும் 'தேங்காய்' உடைத்து வைத்துத் தெரிசனம் பார்க்கின்றனர். வெண்கலத்தைக் கீறிவைத்த அகல் விளக்குப் போன்ற பிறை சுடரொளி வீசுகிறது. **கண் இமை திறந்து பார்ப்பது போலப் பிறை மேலிருந்து உலகைப் பார்க்கின்றது.** மோகித்திருக்கும் பெண்ணின் 'சிறக்கணித்த' பார்வை இது, இளம் காதலனுக்கு! மோனத்திலிருக்கும் புத்தனின் தவ அருட்பார்வை இது, மனம் வளர்ந்தவர்க்கு! இங்குக் கவிஞனுக்குத் தண்ணிய வெண்ணிலவைப் பொழியும்பிறை, வானத்திலிருந்து உலகைக் கண்குளிர — இமை குளிரப் பார்ப்பதுபோல இருக்கிறது. உலகைத் தழைக்கவைக்கும் கடமை தவருத நிலாவாத்தாளாதலின், அவள் நீதியுள்ள நிலாவாத்தாள் என்று போற்றப்படுகின்ருள்.

> வட்டவட்ட 'ராவிலேயும்[1]
> மாசிப் பிறையிலேயும்

---

1 வட்டரா : வட்ட நிலா. வட்ட வட்ட நிலாவிலேயும் என்பதுதான் ராவிலேயும் என மருவிற்று. நிலா -> லா -> ரா என ஆயிற்று.

திட்டமுள்ள ராவாத்தா(ள்)[2]
　　தெருவீதி வாரான்னு
தேங்காய் உடைப்பாரும்
　　தெரிசனங்கள் பார்ப்பாரும்
வெங்கலத்தைக் கீறி[3]
　　விளக்கெரம்ப நெய்வார்த்துக்
கண்குளிரப் பார்ப்பாளாம்
　　காட்சியுள்ள ராவாத்தா(ள்)
நிமை[4] குளிரப் பார்ப்பாளாம்
　　நீதியுள்ள ராவாத்தா(ள்)!
போடுங்கள் எல்லோரும்
　　பொன்னுந் திருக்குலவை!![5]

---

2 நிலா + ஆத்தாள் — நிலாவாத்தாள்
இரா + ஆத்தாள் — இராவாத்தாள்
இரா + ஆண்டை — இராவாண்டை, ராவாண்டை.
எது மூலம் எனத் தோற்றுவாறு இச்சொற்கள் ஒன்றினொன்று மருவி வழங்குகின்றன.

3 பிறை, வெண்கலத்தைக் கீறிவைத்த அகல்விளக்குப் போல இருக்கிறதாம்.

'விண்ணிடத்து எறிந்த வெள்ளைப் பூசணிக்கீற்றோ' என்று பிறையைப் புனைந்துரைக்கும் கவிஞர் முடியரசனின் பாடல் இவண் ஒப்பிடத் தக்கதாகும். (முதற் கவிதைத் தொகுதி)

4 நிமை : இமை. நிலவு தண்மையின் பொழிவு. உலகைத் தழைக்க வைக்கும் இவ் வருட்பார்வையைக் கண்குளிரப் பார்த்தல் என்பதோடமைந்தால் உலகவழக்குப் போன்றதாக இருக்கும். 'இமைகுளிரப் பார்த்தல்' எனும்போது மிகவுயர்ந்த இலக்கியப்பான்மை மிளிர்கிறது. 'கண் மட்டுமன்று; சுற்றியுள்ள இமையும் குளிர' என்ற தொடரால் தண்மைக்காட்சி (Image) நன்கு உருவகிக்கப்பட்டுவிடுகிறது.

5 ஒரு கட்டத்தை ஒருத்தி பாடிமுடிக்க, எல்லோரும் குரவையிடுவார்கள்; அடுத்ததை மற்றவள் பாடுவாள். கூடிப்பாடுதலும் (chorus song) கதைப்பகுதிகளை அவருள் ஒருத்தி தனித்துப் பாடுதலும், ஒவ்வொரு கட்டம் முடியும்போதும் அனைவரும் சேர்ந்து குரவையிடுதலும் இதன் மரபுகள்.

## 2

### அரும்பெடுத்தும் பூசைசெய்யும் நிலாவழிபாடு

மாசிப்[6] பொறையிலேயும்
வட்டவட்ட 'ராவிலேயும்
தேசிய'[7] ராவாத்தா(ள்)
திருநாள் விளங்குறுளே!
அரியக்குடி[8] நந்தவனம்
அரும்பாச் சொரிந்தாலும்
அருமையுள்ள நிலாவுக்கு
அரும்பெடுப்பார் எத்தனையோ?
குன்னக்குடி நந்தவனம்
கொழுந்தாச் சொரிந்தாலும்
குணமுள்ள நிலாவுக்குக்
கொழுந்தெடுப்பார் எத்தனையோ?
புதுக்கோட்டை நந்தவனம்
பூவாச் சொரிந்தாலும்
பொறுமையுள்ள நிலாவுக்குப்
பூவெடுப்பார் எத்தனையோ?[9]

## 3

### உவமையில் ஒளிவீசும் ஒப்பற்ற நிலா

பிறை நிலவின் அழகும் பொலிவும் மலர்களை நினை வூட்டுகின்றன. தும்பைப் பூப்போன்ற வெண்மை; கொன்

---

6 மாசிப்பொறை - மாசி மாதத்துப் பிறை.

7 தேசிய - ஒளிமயமான. இதனைத் 'தேசமெங்கும் ராவாத்தாள்' என்றும் பாடுவர்.

8 அரியக்குடி, குன்றக்குடி என்பன காரைக்குடியை அடுத்துள்ள ஊர்கள். வாய்மொழிப் பாடலில் பாடும் இடத்திற்கேற்ப ஊர்ப்பெயர்கள் மாறிக் கொள்ளும்.

றைப் பூப்போன்ற குணம்; ஆவரம் பூப்போன்ற வடிவம்; டல்லிகைப் பூப்போன்ற தூய்மை அனைத்தும் பெற்றவள் நிலாவாத்தாள்!

நிலவு மகள் கரிக்கரிவாள் போலக் கண்திறந்து பார்க்கின்றாள்; வாங்கரிவாள் போல வட்டம் சேர்ந்துவிளங்குகிறாள்; வெட்டரிவாள் போல ஒளிவீசித் திகழ்கிறாள்!

ராவாண்டைப் பாடலில் அவ்வவ்ஊர்ப் பெண்தெய்வம் ராவாத்தாளாக உருவகிக்கப்பட்டு வழிபடப் பெறுகின்றது. அஃதாவது காரைக்குடியில் உள்ளவர்க்குக் **கொப்பாத்தாளும்** ராவாத்தாளும் ஒரு தெய்வமேயாம்; ராவாத்தாள் தான்கொப்பாத்தாளாக அவ்வூரைக் காக்க எழுந்தருளியிருக்கின்றாள். இந்த ராவாத்தாள் புதுப்பட்டியில் மாம்பழத்தாளாகவும் நெற்குப்பையில் பிடாரி ஆத்தாளாகவும் தேவகோட்டையில் கோட்டையம்மனாகவும் - அந்தந்த ஊர்த் தெய்வமாகக் கருதப்பட்டு ராவாண்டைப் பாடலில் குறிக்கப்படுவதைக் காண்கிறோம். இவ்வகையில் நிலவைப் பெண்ணென்று கருதி வழிபடும் மரபு 'சக்தி வழிபாடாகவே' மலரக் காண்கிறோம்.

நிலவின் கதிர்களில் உணவுப் பொருள்களை விளைக்கும் மின்னாற்றல் உண்டென்று தமிழ் மக்கள் கருதினர், பாலைக் கலியில் பாலை பாடிய பெருங்கடுங்கோ **பயங்கெழு பல் கதிர் பால்போலும் பொழுதொடு** [31 : 11] என்ற குறிப்பிடுகிறார். இதற்கு நச்சினார்க்கினியர், 'உலகிற்கு உணவுகளை விளைத்தற்குக் காரணமாகிய மதியின் கதிர்கள் பாலையொத்து விளங்கும் இராப்பொழுதோடே...' என உரை எழுதி விளக்கியுள்ளார். ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்வரை-உயிரினமனைத்தும் ஓய்வுகொள்ளும் நேரம் இரவாகும். ஓய்வு கொண்டுறங்கும் பொழுது உயிரினங்கள் வளர்ச்சியுறுகின்றன. எனவே மதி பொழியும் நிலவொளி உயிரின் வளர்ச்சிக்கு-குறிப்பாகப் பயிரினத்தை, உணவுகளை விளைத்துத் தருதற்கு உறுதுணையாக இருக்கிறது எனக் கருதினர்.

வான் பொய்ப்பினும் தான் பொய்யாதது காவிரி என்பது போல, உலகமே 'மாரி வறங் கூர்ந்து' விலைவாசி ஏறித் துன்பம் பட்டாலும் ராவாத்தாள் நாடழியச் சம்மதியாள் என்பது இப்பாடற் கருத்தாகும்,

தும்பைப்பூப் போலத்
 தூத்திவிட்ட நிலாவாத்தா(ள்)[10]
கொன்னைப்பூப் போலக்
 குணமுள்ள நிலாவாத்தா(ள்)
ஆவரம்பூப் போல
 அள்ளிவிட்ட[11] நிலாவாத்தா(ள்)
மல்லிகைப்பூப் போல
 மலருற நிலாவாத்தா(ள்)!
கரிக்கரிவாள் போலே
 கண்திறக்கும்[12] ராவாத்தா(ள்)
வாங்கரிவாள் போலே
 வட்டம்சேர்ந்த ராவாத்தா(ள்)

---

9 தலைதந்த இறைவனுக்குத் தலைதாழ்த்தி வணங்குவதுபோல அரும்பும் பூவும் கொழுந்தும் தழைக்கவரும் நிலவை அவற்றால் வணங்குகிற எண்ணம் எத்தனை பேருக்கு வருகிறது? பூத்துக் குலுங்குகிறது பூவுலகம். ஆயினும் பொறுமையுள்ள நிலாவிற்குப் பூவெடுத்துப் பூசை செய்வார் சிந்தனையுள்ள சிலரேயாவரென்பதை இப்பாடல் எடுத்துக் காட்டுகிறது.

10 சிற்சிலபோது நிலவாத்தாள் என்றும் லாவாண்டை என்றும் இது போல ஒலித்துப்பாடுகின்றனர்.

11 தூற்றிவிட்ட, குணமுள்ள, அள்ளிவிட்ட, மலருற என்ற அடை மொழிகளால் இவ் உவமைகளின் காரணங்கள் அல்லது பொதுத் தன்மைகள் உணர்த்தப்படுகின்றன.

12 மூன்றும்பிறை அரைவட்டக் கோடாகச் சிறிதே இமைதிறந்த கண் போல்வதை இச் சொல்லோவியம் காட்டுகிறது. "நந்தவனம் கண்திறந்து நாலுவகைப் பூ வெடுத்து" என்று பூ முருக்கவிழ்வதைத் தாலாட்டில் பாடுவர்.

வெட்டரிவாள் போலே
    வெளிச்செரிக்கும் ராவாத்தா(ள்)!

நாழிவிலே வித்தாலும்
    நாடழிஞ்சு போனாலும்
நம்மஊர்க் கொப்பாத்தா(ள்)
    நாடழியச் சம்மதியா(ள்)
உழக்குவிலே வித்தாலும்
    ஊரழிஞ்சு போனாலும்
உண்மையுள்ள கொப்பாத்தாள்
    ஊரழியச் சம்மதியா(ள்)![13]
ஆல இலேதனிலே
    அன்னங்கள் மேய்ந்தாற்போல்[14]
ஆராய்ந்து எழுந்திருச்சு
    வாராளே 'ராவாத்தா(ள்)!
போடுங்கடி எல்லோரும்
    பொன்னுந் திருக்குலவை!!

---

13 தேவகோட்டையில் இதே வாய்மொழிப்பாடல், இடத்திற்குத் தக மாறிக்கொள்ளும் விதத்தைக் கீழே காணலாம் :-

நாழிவிலே வித்தாலும் நாடழிஞ்சு போனாலும்
நம்மூருக் கோட்டையம்மன் நாடழியச் சம்மதியாள்!
உழக்குவிலே வித்தாலும் ஊரழிஞ்சு போனாலும்
உள்ளூருக் கோட்டையம்மன் ஊரழியச் சம்மதியாள்
பதக்குவிலே வித்தாலும் படைபோகார மின்னாலும்
பட்டணத்துக் கோட்டையம்மன் படைபோகச் சம்மதியாள்!

14. நீலவானில் விண்மீன்கள் சூழப் பிறை நிலா காட்சியளித்தல் ஆல இலையில் அன்னங்கள் மேய்வது போல இருக்கிறது. பெடையும் பார்ப்புகளுமாய் வெண்ணிறப் பறவைகள் நீலநிற வானில் இரைமேய்கின்றமை அழகிய காட்சியுருவகமாகும்.

# 4

## வேட்டையாடி வரும் வீரர்களும் விரும்பி வரவேற்கும் மகளிரும்

பிறை தொழுதலுக்கும் குறிஞ்சிநில நாகரிகத்திற்கும் தொன்மைக் காலத் தொடர்புண்டென்று தெரிகிறது. குறிஞ்சி வேட்டுவர் நிலவொளி வீசும் இரவு வேளையில் வேட்டையாடச் செல்வர். கீழ்வரும் 'ராவாண்டைப் பாடலில் இதுபோன்ற தொரு 'பாரிவேட்டை' பற்றிய செய்தி, கதைபோலக் குறிப் பிடப்படுகிறது. ஆனால் அக் கதைவடிவம் தெளிவாகப் புலனாக வில்லை. வேட்டைக்குப் போயினர் என்பதும் அதுபோழ்து தலைவி நோன்பிருந்து, நற்சகுனம் பார்த்திருந்தனள் என்பதும் மட்டும் புலனாகின்றன.

தெற்கே தெற்கே போகுமாம்
    வெத்திலைக் கொழுந்து[15]
சேமந் தடுக்கிடுமாம்
    செங்கழுநி[16] மாலை
முத்துக்கும் கீழே
    முனிக்கரும்பை நட்டுவைச்சு
மூவாயிரம் பேரைக்
    கல்லாய்ச் சமைச்சுவைச்சு[17]
பன்னி[18] குத்தப் போகையிலே

---

15 பிறை நிலாவிற்கு வெண்ணிற வெற்றிலைக் கொழுந்து உவமை.

16 செங்கழு நீர்ப் பூமாலை.

17 "மூவாயிரம் பேர்களை முன்னால் கறி சமைத்து" என்றும் பாடுவர்,

18 பன்னி-பன்றி. கேழல் எனப்படும் காட்டுப்பன்றி.

பங்கம் அழியாமலே
படுவீரம் பூச்சியை
ஏறி மிதியாமல்
எட்டாட்டுக் கொம்புவந்து
இளங்காட்டு வில்வந்து
மான்வந்து அணையவே
மயில்வந்து கூவவே[19]
மகிழும் பழத்தைக்
கிளிவந்து கொய்யவே
அழகருது[20] கொண்டு
திருவாசல் மேஞ்சு
அதிலே இருப்பாளாம்
அழகான 'ராவாத்தா(ள்)!'
போடுங்கடி பெண்டுகளா
பொன்னும் திருக்குலவை!

கேழல் எனப்படும் மிகப்பெரியதொரு காட்டுப்பன்றி தினையை அழிக்க முயலுகையில் குறிஞ்சி நிலத்தவர் அதனைக் கொன்று தினைப்புனத்தைக் காப்பர். இங்கு பன்றி நெல்லுப் பூவை-வளரும் நெற்பயிரை அழிக்க முயல்வதாகவும், அதனால் அதனை வேட்டையாடிக் கொல்வதாகவும் வருகிறது. காலம் அறியாமல் நெல்லுப்பூத் தின்ன வந்த பன்றியைக் குடல்கள் சரிந்துவிழ ஐயன்மார் குத்திக் கொன்று விட்டனர். இதனைக் கொண்டாடும் வகையில், வெற்றி பெற்ற வேட்டை மறவர் களுக்குப் பரிவட்டம் கட்டிக் கூட்டி வருகின்றனர். ஒரே உயர

19 'எட்டாட்டுக் கொம்புபோல் மான் வந்தணையவே இளங்காட்டு முள்ளுப்போல் மயில்வந்து கூடவே' என்றும் பாடுவர்.

20 அழகு கதிர்கொண்டு - அழகிய நெற்கதிர்களைக் கொண்டு.

முள்ள மறக்குடிமகளிர் பலர் இரு வரிசைகளாக நின்று, குரவையிட்டு ஓடி ஆடிப் பாடி வரவேற்கின்றனர். குரவைக் கூத்து இதில் குறிப்பிடப்படுகிறது.

பன்னியொரு[21] பன்னி
  பாரமுள்ள பன்னி
நெல்லுப்பூ[22] திங்கப்போய்
  நேரம் அறியாமல்[23]
குத்தினர் அய்யாமக்கள்
  குடல்கள் சரிந்துவிழ
பதினெட்டுக் கள்ளமக்கள்
  பரிவட்டம்[24] கட்டிவர
ஒரு சோட்டுப்[25] பெண்கள்
  ஓடிக் குலவையிட
மறுசோட்டுப் பெண்கள்
  வந்து குலவையிட
போடுங்கள் எல்லோரும்
  பொன்னுந் திருக்குலவை !

---

21 பன்றி, பாரமுள்ள பன்றி-கேழல் எனப்படும் கனத்த காட்டுப்பன்றி.

22 நெல்லுப் பீள்வைத்துப் பால்கட்டிக் கதிர் பிடிக்கிற நேரம்.

23 நேரம் அறியாமல்-காட்டுப்பன்றி அறியாத வகையில் ஒளிந்து சென்று சமயம் பார்த்துத் தாக்குவது. பன்றி நேரம் அறியாமல் நெல்லுப்பூ தின்னவந்தது என்றும் கூறலாம்.

24 தலைப்பாகை கட்டுதலைப் பரிவட்டம் கட்டுதல் என்பர். வெற்றிவீரர் களை இங்ஙனம் தலைமை தோன்ற அழைத்து வருவர்.

25 ஒரு சோட்டுப்பெண்கள்-ஒரே உயரமுள்ள இளம் பெண்கள், சுவடு --> சோடு. சோடி என்பதும் இதனின்று தோன்றியதேயாதல் கூடும். . ஓடிக் குரவையிட, வந்து குரவையிட என்பன எதிர்எதிரே நின்று ஆடிப்பாடுவதைக் குறிக்கும். எழுவர் அல்லது பதினொருவராக வட்டமாக நின்று கூத்தாடுவர். முன் தேர்க்குரவை, பின்தேர்க்குரவை என்பனவும் வெற்றியைச் சிறப்பிக்கும் குரவைக் கூத்துக்களேயாகும்.

## 5

சிந்தாமணி நாவைத்
திக்காமல் தாருமையா.

நிலவைப் பாடுதற்குரிய நாவன்மையைத் தந்தருளுமாறு, சூரியனிடம் வரம்வேண்டுகிருள் ஒரு பெண். பகலெல்லாம் உலகிற்கு ஒளிதந்து தற்காத்த பகலவனுர்தாம் நிலவுக்கும் ஒளியூட்டுகிருர். நிலவைப் பாட (ராவாண்டை பாட) நாவெடுத்த நேரமெல்லாம் சோம்பல் ஏற்படாமலும் சொற் குன்ருமலும் செய்தி தவருமலும் செந்நாக்குக் குறைபடாமலும் இருக்க வரம் கேட்கிருள். ''சிந்தாத மணி நாக்கு'', ''கோல மணி நாக்கு'' என அவள் கேட்கும் வரமே கற்பனைநயமும் சொற்புனை எழிலும் உடையதாயிருக்கிறது. வாய்மொழி இலக்கியமாகப் பாடும் பெண்கள் அருவிவீழ்ச்சி போல், ஆற்று நீரோட்டம் போல் தங்கள் பாட்டுத் தொடர்ந்து அமையுமாறு வேண்டுவது கடவுள் வாழ்த்தாகவும் அவையடக்கமாகவும் அமைகிறது.

பகபக சூரியரே
பகலெல்லாம் தக்காத்தவரே!
நருளைப்[26] படைத்தவரே
நானையா உன்னடிமை
நாவெடுத்த நேரமெல்லாம்
நானடியாள் சோம்பாமல்[27]

---

26 நரரை-மனிதரை, 'நருளை' எனில் பொருள் விளக்கமில்லை.

27 நா எடுத்தல்-பாடத் தொடங்குதல், வாய்மொழி இலக்கியம் திட்டமிட்டுப் பாடுவதன்று. முன் ஆயத்தமின்றிப் பாடுவது (Improvisation) எனவே இடையறவுபடாமல் தொடர்ந்து பாட்டுவரவேண்டும் என்பதற்காக இறையருள் வேண்டப்படுகிறது.

நாக்குத் தவருமே
　　நன்ளுக்கும் குன்ளுமே[28]
சேதி தவருமே
　　செந்நாக்கும் குன்ளுமே
திக்காமல் தாருமையா
　　சிந்தாமணி நாக்கே
போடுங்கடி பெண்டுகளா
　　பொன்ளுந் திருக்குலவை?

## 6

**எதிலும் எங்கும் தெய்வமிருக்கும்;**
**எங்கும் எதிலும் நிலவுமிருக்கும்!**

நிலவும் அவ்வவ் ஊர்க்கிராமத் தெய்வமாகிய சக்தியும் ஒன்ருகவே வழிபடப் பெறுதலே நாம் இப்பாடல்களில் மிகத் தெளிவாகக் காண்கிருேம். உலகெங்கும் பரவி ஒளிவீசும் நிலாப்போல சக்தியாகிய அம்மன் தெய்வமும் எங்கும் நிறைந் திருக்கிறதென்பதை இப்பாடல் நினைவூட்டுகிறது. ஊருணியா, படித்துறையா, தேரடியா, கதவடியா, நிலையடியா, ஆம் எங்குமே. எதிலுமே தெய்வம் உறைகிறது. ஏன்? பார்ப்பவர் கண்களின் இமையடிக்குள்ளேயே அது இருக்கிறது!

அரசாம் படித்துறையாம்
　　அடுத்தாப்போல் ஊரணியாம்
எதிர்த்தாப்போல் தேரடியாம்!
　　தேரடிக் குள்ளிருப்பாள்
தெய்வகுலக்[29] கொப்பாத்தா(ள்)

---

28 குன்ளுமே - குன்ருமல்

29 'கொப்பாத்தாள்' காரைக்குடி அம்மன்பெயர். இது கோட்டையம்மன் என்று தேவகோட்டைப் பாடலிலும் மாம்பழத்தாள் என்று பொன்னம ராவதி புதுப்பட்டிப் பாடலிலும் இடம் பெறும். நிலவை இவ்வாறு அவ்வவ் ஊர் அம்மனுகவே கருதி வழிபடுவர்.

கதவடிக் குள்ளிருப்பா(ள்)
காட்சியுள்ள கொப்பாத்தா(ள்)!
நிலையடிக்[30] குள்ளிருப்பாள்
நீதியுள்ள கொப்பாத்தா(ள்)!
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை !

# 7

## கொண்டாட்டம் - ஆதாளி

ராவாண்டையில் 'சிறு வீடு கட்டிச் சிறு சோறு சமைத்து' விளையாடுவது முக்கிய பகுதியாகும். இதுவே, இவ்வழிபாடு தொன்மைமிக்க காலத்தில் கன்னிப்பெண்களால் கடைப்பிடிக்கப்பட்டு வந்ததென்பதை உணர்த்தும். சங்க நூல்களில் 'ஓரை' 'வண்டல்' என்ற பெயர்களால் சுட்டப்படுவதும் இவ்விளையாட்டேயாகும். வெள்ளியினாலும் பொன்னாலும் கூடக் சிறு சுளகு செய்துவைத்து விளையாடுவர். பானை, அடுப்பு முதலியன எல்லாம் விளையாட்டிற்கென மண், மரம், வெள்ளி, தங்கத்தினால் தகுதிக்கேற்பச் செய்துவைத்து விளையாடி வந்துள்ளனர். இந்தப் பெருமையை ஒரு பெண் மேலும் பெரிதுபடுத்திப்பாடி மகிழ்கிறாள். ஆதாளி என்றால் ஆரவாரம், கும்மாளம் போலும்.

கொப்பாத்தாள் வாசலிலே
என்னென்ன ஆதாளி?
தங்கச் சுளகெடுத்துத்
தளங்[31]கொழிக்கும் ஆதாளி
பொன்னும் சுளகெடுத்துப்
பூக்கொழிக்கும் ஆதாளி

30 "நிமையடிக் குள்ளிருப்பாள், நீதியுள்ள கொப்பாத்தாள்" என்றும் பாடுவர். நிமை - இமை.

31 தளம் - தரளம், முத்து.

வெள்ளிச் சுளகெடுத்து
விளையாடும் ஆதாளி
மட்டச் சுளகெடுத்து
மதுக்கொழிக்கும் ஆதாளி
போடுங்கள் எல்லோரும்
பொன்னும் திருக்குலவை!

## 8

**பால்மதி மகிழப்
பாற் பொங்கல்**

சுளகு கொண்டு கொழித்தெடுத்த அரிசியினால் பால் பொங்கல் வைக்கின்றனர். பால் நிலா கீழேயுள்ள பாற்பொங்கலைக் குனிந்து எடுக்க மாட்டாமையால், அதைப் பார்த்துக் கொண்டு மேலேயே கொலுவிருக்கிறாளாம்!

அஞ்சு கரகமாம்
அதுமேல் பால்கரகம்
குனிஞ்செடுக்க
மாட்டாமல்
கொலுவிருக்கா
கோட்டையம்மன்!

## 9

**திரும்பிப்பார்
தேன் நிலவே!**

நிலாவாண்டை போடுமுன் தெருவைக்கூட்டிப் புதுமணல் அள்ளிவந்து பரப்பித் தென்னம் பாளை முதலியன கட்டி அணி செய்துள்ளனர். ஒரு பெண் நிலவிற்கு அளிக்கப்படும் இவ் வரவேற்பைச் சுட்டிக்காட்டித் 'திரும்பிப்பாரடி ராவாத்தாள்' என வேண்டுவது அழகிய கருத்தாகும்.

முன்பெல்லாம் தெருவிலேதான் ராவாண்டை போடுவது வழக்கம் என்பர். பின்பு வீடுகளில் கொண்டாடினர். திருமண வீட்டை அலங்கரிப்பது போல ராவாண்டை போடுமிடம் அலங்கரிக்கப்படும். புதுமணல் கொண்டுவந்து பரப்புவர். முன் பக்கம் வாழைமரம் கட்டிவைப்பர். தென்னம்பாளையும் தோரணங்களும் தொங்கவிடுவர். ராவாண்டையில் கிழவன், கிழவி, கன்னிமார் எழுவர் (ஆயத்தார்) என்பனவாக மண்ணினுற் பிடித்துவைத்து ராவாண்டைக்குத் திருமணம் செய்து வைப்பது போலவே கொண்டாடி வந்துள்ளனர். இதற்குத் திருமண விருந்து போல்ச் சிறுசோறு சமைத்தல் முதலியனவும் இடம் பெற்றுள்ளன. நல்ல கணவனை அடைதற்கெனத் தொன்மை மிக்க காலத்தில் கன்னிப்பெண்கள் இதனைக் கொண்டாடி வந்திருக்க வேண்டும் என்பது இதனாலும் வலிவுறும்.

தெருக்கூட்டி
மணற்பரப்பித்
தென்னம்பாளை
விரித்துணர்த்தித்
தெருக் கிடக்கிற
சிங்காரத்தைத்
திரும்பிப்பாரடி
ராவாத்தா(ள்)!
போடுங்கள் எல்லோரும்
பொன்னும் திருக்குலவை!

## 10

**வான வழியாக
வருகின்ற வாழ்வரசி**

தூய மஞ்சள்போலும் பிறைமகள் மங்கல மடந்தையாக வருகின்றாள். இங்கே ஒரு கதைப்போக்கிலான (Narrative) கற்பனை இடையில் புகுகின்றது. அக்கரையிலிருந்து இக்கரை

நோக்கிவரும் பிறை மடந்தை ஒரு மைந்தனை ஒக்கலில் எடுக்கிக் கொண்டு, மற்றொரு பாலகனை முன்னே நடக்கவிட்டுக் கொண்டு வருகின்றாள். நிலவின் உள்ளே இருக்கும் நிழலிலே இவ்விதத் தோற்றமுண்டு அல்லவா? அதுவே கற்பனைவடிவம் பெறுகிறது. ஆற்று வழி வரின் அடி சுடும் என்று, சேற்று வழி போனால் சேறுபடும் என்று கொப்பாத்தாள் வாசலில் பூமணக்க வானவழியாக வருகின்றாள். இங்ஙனம் காரணம் காட்டிக் கற்பனை செய்யும் அழகு உள்ளத்தைத் தொடுகிறது. தாலாட்டு, ஒப்பாரிப் பாடல்களில்கூட இவ்வாறு இடையிடையே கதைப்போக்கான கற்பனைகள் இடம்பெறும். இவை போல்வன காலப் போக்கில் பழம் மரபுப் புராணக் கதைகளாக (Myths and Legends) உருவம் பெறுதலுமுண்டு.

மஞ்சள் ஒரு மஞ்சள்
மரக்காட்டு மஞ்சள்
ஏழு பொதியிலையும்[32]
எடுத்துவிட்ட மஞ்சள்
ஆவரம் பூப்போலே
அள்ளிவிட்ட மஞ்சள்
தும்பைப் பூப்போலே
தூக்கிவிட்ட மஞ்சள்
அக்கரையி(ல்) மஞ்சளை[33]
ஒக்கல் எடுக்கி
அவ'பெத்த பாலகனை
முன்னே நடத்தி
ஆற்றுவழி போனாலும்
அடிசூடும்[34] என்று சொல்லி

---

32 ஏழு பொதி மஞ்சளிலும் தேடி, ஆராய்ந்து எடுத்த சிறந்ததோர் மஞ்சள் போன்ற அழகு. பிறையின் அழகைப் பேசும் அழகு காண்க.

33 அக்கரை என்று வானம் அல்லது மேலுலகம் குறிக்கப்படுகிறது.

34 அடிசுடும் என்பது ஓசை கருதி அடி சூடும் என்றாயிற்றுப் போலும்.

சேற்றுவழி போனாலும்
  சேறணையும் என்று சொல்லி
ஆமணக்கந் தண்டுவெட்டிக்
  கொப்பாத்தாள் வாசல்
பூமணக்க வாராளாம்!
  போடுங்கடி பெண்டுகளா
பொன்னூந் திருக்குலவை!

## 11

### விருந்தும் வெற்றிலையும்

ராவாண்டை போட்டு ஆடிப்பாடிக் கொண்டிருக்கும் பொழுது நிலவு மேகத்துள் மறைகிறது. உடனே அதற்கொரு கற்பனை செய்து கதை கூறுகிருள் ஒருத்தி!

சிறுவீடுகட்டி இல்லறம் நடத்தும் பொழுது நிலாமகள் அறவோர்க்களித்தல், அந்தணரோம்பல் முதலியவற்றைப் பேணி விருந்துபுறந்தருகிருள். தன் உடன்பிறப்பாய பெண்களுக்கெல்லாம் தானமிடுகிருள். அப்போது வெற்றிலை தேடி மேனாடு போகையில், நிலவை மேகங்களோடி மறைத்து விட்டன. இதைக் கண்ட மகளிரனைவரும் எதிரெதிராக ஓடிக் குரவையிட்டு ஆடிப்பாடுகின்றனர்.

'ராவாண்டைக்கும் குரவைக் கூத்துக்கும் பழம் தொடர்புண்மை இதனாலும் அறியப்படும். சிலப்பதிகாரத்தில் வரும் '**ஆய்ச்சியர் குரவை**' **போல்வது இது**. முற் காலத்தில் எங்ஙனம் குரவையாடினர் என்றும் குரவையில் எவ்வாறு கதைபோலக் கூறியும், உரையாடியும் பாடினர் என்றும் இப்பாடல்களிலிருந்து ஓரளவு அறியலாம். போடுங்கடி பெண்டுகளா பொன்னும் திருக்குலவை என ஒவ்வொருதடவையும் முடிவது இது குழுப்பாடல்என்பதையும், ஆடலுடன்கூடிய பாடல் என்பதையும். மகளிர் பாடல்

என்பதையும், குரவைப்பாடல் என்பதையும் உணர்த்துகிற தன்றோ ?

செங்கல் அறுப்பாளாம்
    சிறுவீடு கட்டுவாளாம்
வெத்திலைப் பெட்டியை
    ஓடித் திறப்பாளாம் !
வேணுமின்ன பெண்களுக்குத்
    தானம் இடுவாளாம் !
வெத்திலை இல்லையின்னு
    மேனாடு போகையிலே
மேகங்கள் ஓடிப்
    பொழுதை மறைக்கவே
ஒரு சோட்டுப் பெண்களெல்லாம்
    ஓடிக் குலவையிட
மறு சோட்டுப் பெண்களெல்லாம்
    வந்து குலவையிட
போடுங்கடி பெண்டுகளா
    பொன்னால் ஒரு குலவை !

## 12

### பலியும் படையலும்

அலைவாய்க்கரையோரத்தில் (கண்மாய்க் கரையில்) அம்மன் கோயில் இருக்கிறது. அலைமோதி வெள்ளம் பெருக் கெடுத்து வருகையில் அதைச் சுளகிட்டு அணைப்பார்களாம் மகளிர் !

தனக்குப் படையலிடும்பொழுது, பலியிட்ட மறியின் இரத்தத்தைக் குடித்துக் குடலைப்பிடுங்கி அணிந்துசென்ற அம்மன் (நிலவுத்தெய்வம்) இப்போது தனக்குச் சுட்டு எடுத்துவரும் பலகாரம், சுண்டல் முதலியவற்றை மலைமீது ஏறிநின்று பார்க்கின்றாளாம் !

மகளிர் மதுக்குடம், முளைப்பாலிகை முதலியன எடுத்து வந்து ஊர்த்தெய்வத்தை வழிபடுவர். கொப்பி கொட்டுதல் எனவும் ஒரு நிகழ்ச்சியுண்டு. இவையெல்லாம் 'ராவாண்டையுடன் தொடர்புடையனவேயாம். இவை தொடர்பான பாடல்களை மதுக்குடப்பாட்டு, முளைப்பாரிப்பாட்டு, கொப்பிப் பாட்டு என்பர். இன்னும் சிற்றூர்ப்புறங்களில் இவ்வகைப் பாடல்கள் வழக்கில் உண்டு.

தனக்கு வரும் படையல்களை - அவை ஊர்வலமாகத் தலைமீது கொண்டுவரப்படுவதை - நிலவு மலைமீது ஏறிநின்று எட்டிப்பார்க்கிறதாம்!

அலைவாய்க் கரையோரம்
இருப்பாளாம் அம்மன்
அலைவந்து மோதவே
சௌளகிட்டு அணைக்கவே
குட்டியும் நத்தமும்
குடிப்பாளாம் அம்மன்
குடல் பிடுங்கி மாலை
அணிவாளாம் அம்மன்
சுட்ட பலகாரம்
சுண்டல் வருதுண்ணு
சோலை மலையேறிப்
பார்ப்பாளாம் அம்மன்!
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை!!

# 13

## மதுக்குடப்பாட்டு

மகளிர்மதுக்குடம் எடுத்துக்கொண்டு மேளதாளத்துடன் ஊரின் வெவ்வேறு திசைகளிலிருந்து புறப்பட்டு வருகின்றனர். சில திசைகளிலிருந்து மதுக்கிளம்ப நெடுநேரமாகிவிடுகிறது.

இதனையே கேள்வியாகத் தொடுத்து, 'ராவாண்டைப் பாடலொன்று பிறக்கின்றது.

மதுவா மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன?
வடக்கு மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன?
வாழ்வரசி பொங்கல்வர[35]
இந்நேரம் ஆனதென்ன?
தெற்கு மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன?
சித்திராங்கி பொங்கல்வர
இந்நேரம் ஆனதென்ன?

பல திசைகளிலிருந்து பல குடும்பத்தவர் கூடித் திரள் திரளாக மதுக்குடம் எடுத்துவருவர். மதுவுடன் பொங்கல் பானையும் பழவகைகளும் பலகார வகைகளும் எடுத்துவருவர். இதனைச் சித்திரிக்கும் இப்பாடலின் இடையே கேலியும் கிண்டலும் புகுந்துகொள்கின்றன. சிலேட்டு விளக்குக் கொண்டுவருவதாகச் சொன்ன சிகப்பி ஆச்சி காலத்தாழ்வாக வந்ததால் அதனை மெதுவாகப் பாட்டோடு பாட்டாக ஒருத்தி குத்திக்காட்டுகிருள். வாழைப்பழம் கொண்டுவருவதாகச் சொன்ன வள்ளியாச்சியின் கதையும் இதுதான் என்பதை அடுத்துவரும் அடிகள் புலப்படுத்துகின்றன.

தெற்கு மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன
சிகப்பிஆச்சி இங்குவர
இந்நேரம் ஆனதென்ன?
சிலேட்டுவிளக்குக் கொண்டுவர
இந்நேரம் ஆனதென்ன?

---

35 வாழ்வரசி, சித்திராங்கி என்பன இங்கு நிலவைக் குறிக்கும்.

வடக்கு மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன?
வள்ளியாச்சி இங்குவர
இந்நேரம் ஆனதென்ன?
வாழைப்பழம் கொண்டுவர
இந்நேரம் ஆனதென்ன?
மூலே மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன?
முறுக்குவடை கொண்டுவர
இந்நேரம் ஆனதென்ன?
கிழக்கு மதுக்கிளம்ப
இந்நேரம் ஆனதென்ன?
கிழவியெல்லாம் இங்குவர
இந்நேரம் ஆனதென்ன?
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை !

## 14

**பாற் பொங்கலில் கல்**

அடுத்து ஒருபெண் இப்பாற் பொங்கலே இறைவன் எடுத்துண்ண முற்பட்ட பொழுது, கல்கிடந்ததென்று கடுங்கோபம் கொண்டு அள்ளி எறிந்ததாகவும் அதனால் அப் பாற்சோறு அழகியம்மன் சேங்கைக்கரைவரை பரவிய தென்றும் பாடுகிருள். இவ்வாறு **பால்நிலவின் ஒளி வீச்சைப் பாற்பொங்கலின் வீச்சாகக்** கற்பனே செய்கிருள்.

பழத்தைப் பிதுக்கிவைத்துப்
பாற் சோத்தைப் பொங்கிவைத்துக்

கலத்திலிட்ட சோத்திலே[36]
கல்லோ கிடக்குதுன்னு
அள்ளி எறிந்தாராம்
அழகியம்மன் சேங்கைதைக்க
புடிச்சி எறிந்தாராம்
புண்ணியவான் சேங்கைதைக்க
வாரி எரிந்தாராம்
வைரமுடிக் கையாலே
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை!

## 15

### குயிலும் மயிலும் கோலமிடும் காட்சி

ஊர்வலமாக வரும் மதுக்குடத்தை இறக்கி வைப்பதற்காகக் கோயில் வாசலில் கன்னியரும் இளம் பெண்களும் மங்கலமடந்தையரும் கலந்திருந்து கோலமிடுகின்றனர்.

காராளை நீருடைய
கொப்பாத்தாள் வாசல்
கலந்திருந்து கோலமிட

---

36 இதுபோன்றதொரு கதைக்கற்பனை தாலாட்டிலும் உண்டு.
கலத்திலிட்ட சோறுதனில்
கல்லோ கிடக்குதென்று - சொக்கர்
கடுங்கோபம் கொண்டாராம்!
வாரி எறிந்தாராம் - சொக்கர்
வயிரமணிக் கையாலே
சோர்ந்து படுத்தாளாம் - மீனாள்
சொக்கட்டங்காய் மெத்தையிலே
முழுக்கதை வடிவமாக வரும் சொக்கர் - மீனாள் தாலாட்டுப் பாண்டிய நாட்டில் மிகுதியாக வழங்குகிறது. அதில் இவ் அடிகளைக் காணலாம்.

பிஞ்சு பிலாக்காயும்
பின்னின்று கோலமிடக்
குந்து விளக்கெரியக்
குயிலிருந்து கோலமிட
மாட விளக்கெரிய
மயிலிருந்து கோலமிட

இட்டாளாம் கோலத்தை
எழுதினாள் சித்திரத்தை
வைத்தாள் மதுக்குடத்தைக்
கொப்பாத்தாள் வாசல் இடம்கொள்ளாமல்
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை!!

## 16

### கொப்பிப்பாட்டு

மதுவாம் மதுக்குடமாம்[37]
அதுக்கேத்த சிம்மாடாம்!

---

37 கொப்பிப்பாட்டு - கொப்பி கொட்டும்போது பாடும் பாட்டு; கொப்பியும் கும்மிபோலக் கூடிநின்று கைகொட்டிப் பாடும் பாட்டேயாகும். கொப்பிப்பாட்டுக் கீழ்வருவது போன்றது:-

கொட்டடி கொட்டடி ராக்காயி
குனிந்து கொட்டடி ராக்காயி
மாரியம்மன் திருவுலாவிலே
குனிந்து கொட்டடி ராக்காயி
ஏலேலோ முளைப்பாரியைத்
தூக்கியே செல்லடி ராக்காயி !
அடி செல்லடி ராக்காயி! ஏலேலோ! ஏலேலோ!!
கரகத்தைத் தூக்கியே
ஆடடி ராக்காயி! ஏலேலோ! ஏலேலோ!!
கொங்கமுத்து மாரியின் பொட்டலிலே
கொட்டடி ராக்காயி குனிந்து
கொட்டடி ராக்காயி! ஏலேலோ! ஏலேலோ!!

மதுவை இறக்கிவைச்சுப்
　　பொன்னூலே கொப்பி[38]
வாசலிடம் கொள்ளாது!
　　போடுங்கள் எல்லோரும்
பொன்னூந் திருக்குலவை!

## 17

### மதுவுக்கு வரவேற்பு

மகர தோரண
　　மாலைகள் சூடி
மாரியம்மனைக்
　　கரகத்தில் நிறுத்தி
வீதிக்கு வீதி
　　கம்பங்கள் வைத்து
வேடிக்கையாக
　　வீணைகள் தொழுது
காணிக் குடையவள்
　　நானென்று சொல்லிக்
காத்து ரட்சிப்பாளாம்
　　கொப்பாத்தாள்!!
போடுங்கள் எல்லோரும்
　　பொன்னூந் திருக்குலவை!!

---

38 அம்மன் வாசலில் மதுவை இறக்கிவைத்தவுடன் பெண்கள் அனைவரும் கொப்பி கொட்டுகின்றனர். செட்டி நாட்டில் பொன்னால் கூடை செய்து அதனுள் பொன்னால் செய்த தேங்காய், பழம் போன்றவற்றை வைத்துச் சுற்றிநின்று கும்மியடித்துக் கொப்பி கொட்டுவர். சாதாரணக் கூடையில் தேங்காய், பழம் வெற்றிலைபாக்கு முதலியன வைப்பதும் உண்டு. இதற்கும் 'கொப்பி' என்று பெயர் கூறுகின்றனர்.

# 18

## பொங்கும் நிலவுக்குப் பொங்கலிடும் காட்சி

எல்லோரும் கூடி ராவாண்டை போட்டுப் பிறை நிலவுக்குப் பொங்கல் வைக்கின்றார்கள். பொங்கல் வைக்கும் அழகிலேயே அவர்களின் கலைத்திறனும் தூய்மையும் சிறப்பும் செல்வமும் புலனாகின்றன. நிலாமகளோ தென்காஞ்சி, வடகாஞ்சியெல்லாம் போய்விட்டு வருகிறாள். விண்மீன்களி டையே வரும் அவள் தன் பதினாறு மக்களையும் கூட்டிக் கொண்டு ஆடுநூறும் மாடுநூறும் ஓட்டிக்கொண்டு சோற்றுப் பதம் சரிபார்க்க வருபவள் போல் காணப்படுகிறாள்.

அடுப்பு மெழுகி
அச்சாணி கோலமிட்டு[39]
நச்சிரகம்[40] போல்
நாழி உமிபரப்பி
ஒத்த விறகுவைத்து[41]
ஒயிலாகத் தீமூட்டி
மூன்று விறகுவைத்து
முந்நூறு பானைவைத்துப்
பானை கழுவிப்
பனிநீர் உலைவார்த்துச்
சருவம் கழுவித்
தண்ணீர் உலைவார்த்து
நாழி வரகரிசி
தீட்டி உலையிலிட்டுத்

39 அச்சாணி கோலமிடப் பயன்படுத்தும் கருவி.
40 நற்சீரகம் என்பது நச்சிரகம் ஆயிற்றுப்போலும்.
41 விறகுகள் கூடத்தம்மில் ஒத்த அளவினவாக வைத்துத் தீ மூட்டுவதி லிருந்து இப்பெண்களின் அழகுணர்ச்சியை அறியலாம்.

தென்காஞ்சி போயித்
 தேரோட்டம் பார்த்துவந்து
வடகாஞ்சி போயி
 மானேட்டம் பார்த்துவந்து

மக்கள் பதினாறும்கூட்டி
 தொட்டி பதினாறும் கட்டி
வட்டி பதினாறும் வாங்கி
 ஆடு நூரேட்டி
மாடு நூரேட்டி
 வாராளாம் 'ராவாத்தா(ள்)[42]
வரகரிசி பதம்பார்க்க!
 போடுங்கடி எல்லோரும்
பொன்னாந் திருக்குலவை !

## 19

### மதுக்குடமும்
### மழைவளமும்

மழைவேண்டி மதுக்குடம் எடுக்கின்றனர். 'பசியும் பிணியும் பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரக்க' என்று கருதியே மதுக்குடம் எடுப்பர். மழைக்காலத்தில் நீர்நிலைகளெல்லாம் பெருகி, நிறைந்து ஒளியும் எதிரொளியுமாய்க் காட்சி நல்குகின்றன. 'மது'க்குடப் பாடலில் 'மது' மிகுதியாக அடுத்தடுத்து இடம்பெறுகிறது. சொல்லாடல் திறன்மிக்க இச் 'சொல்விளம்பி'ப்பாடல் இலக்கிய இன்பம் தருகிறது. சொல்லணியில் மனம் மயங்கும் கவிஞர் போல இங்கு

42 நிலாமகள் வான் வழியாக வருவதை இவ்வாறு கற்பனைசெய்து பொங்கலின் சோற்றுப் பதம் பார்க்க வருவதாகவும் ஊரெலாம் சுற்றி வலம் வருவதாகவும் குறிப்பிடுகிறாள். ஆடு, மாடுகள் நட்சத்திரங்கள்.

'ராவாண்டைப்பெண் மதுவை வைத்துச் சொல்லாடல் புரிகின்றாள். இக்காலக் கவிஞர்களின் சொல் விளையாட்டு களுடன் இது போட்டி போடுகிறது.

பாகை வரவே
    பாகை வீசி வரவே
பாகணிச் சம்பா
    விளைந்து வரவே

நீரு மதுக்குள்ளே
    நிழலு மதுக்குள்ளே
நீராடும் பெண்கள்
    தானு மதுக்குள்ளே
பொற்கரக மதுக்குள்ளே[43]
    பொற்றூணு மதுக்குள்ளே
போரானை கட்டிய
    தும்பு மதுக்குள்ளே
போடுங்கள் எல்லோரும்
    பொன்னுந் திருக்குலவை !

## 20

**மழை பொழிகிறது !**
    **கற்பனை விளைகிறது !**

ராவாண்டையில் அதிலுள்ள கிழவன் கிழவியரின் திருமணமே அதன் சிறந்த உட்பொருளாகக் கொண்டாடப் படுகிறது.

மழை பொழிந்து விளைவு பெருகிவிட்டால் கவலையற்ற வாழ்வு வாய்க்கும். மழை பொழிய, மேகங்கள் கூடி விண்ணை மறைக்கின்றன.

---

43 பொய்க்கரக மதுக்குள்ளே பொய்த்தூணு மதுக்குள்ளே என்றும்பாடுவர்.

ராவாண்டை போட்டுக்கொண்டிருக்கும் பொழுது, இடையே நிலவு மேகத்தில் மறைந்து, சற்றுநேரம் கழித்து வெளிப்படுகிறது. ஒரு ராவாண்டைப்பெண் மனத்தில் இக் காட்சி கற்பனையொன்றைத் தோற்றுவிக்கிறது. உரையாடல் வடிவில் பாடல் உருவாகின்றது. நிலவைப்பார்த்து, 'நிலா நிலா எங்கே போனாய்?' என்று கேட்க, நிலவு 'கலியாணம் சொல்லப்போனதாகப்' பதிலிறுக்கின்றது. பறவைகளை 'அடை மழைக்கெல்லாம் எங்கிருந்தீர்கள்?' என்றுகேட்டால் அவைகள் தங்கள் குஞ்சுகளுக்கு இரைதேடியதால் ஏற்பட்ட துன்பத்தை எடுத்துரைக்கின்றன. அத்துன்பத்தால் பறவைகள் விட்ட கண்ணீர்தான் ஊரெல்லாம் வழிந்தோடுகிறதாம்! மழையால் வந்த வெள்ளத்தை, பறவைகள் தத்தளித்துவிட்ட கண்ணீர் வெள்ளம் என்று தன் கற்பனையை ஏற்றியுரைக்கின்றாள் பாடுபவள்! 'தற்குறிப்பேற்றம்' என்ற அணி புலவர்கட்கே தனிச்சொத்தா என்ன?

'ராவாண்டே, 'ராவாண்டே
  எங்கே எங்கே நீ போனாய்?
கள்ளாந் திருக்குடிக்குக்
  கலியாணம் சொல்லப்போனேன்!

மாடப் புருவே,
  மயில்கோழி வம்மிசமே!
பெய்யும் மழைக்கும்
  பெருமழைக்கும் எங்கிருந்தாய்?
அடிக்கும் மழைக்கும்
  அடைமழைக்கும் எங்கிருந்தாய்?

கல்லைத் துளைத்துக்
  கடற்கரையே முட்டையிட்டு
இட்ட்முட்டை மூணுமுட்டை
  பொரிச்சகுஞ்சு 'ரெண்டுகுஞ்சு

இளையகுஞ்சுக் கிரைதேட
இருகாதம் போய்விழுந்தேன்!
மூத்தகுஞ்சுக் கிரைதேட
முக்காதம் போய்விழுந்தேன்!

மாயக் குறத்திமகன்
வழிமறித்துக் கண்ணிகட்டிக்
காலுரெண்டும் கண்ணியிலே
சிறகிரண்டும் பறவடிக்க
ஆத்தா டோ
அப்பா டோ
அப்பவந்த கண்ணீரு
ஆறுபெருகி ஆனைகுளிப்பாட்டி[44]
ஓடைபெருகி ஒட்டை குளிப்பாட்டிக்
குண்டுபெருகிக் குதிரை குளிப்பாட்டிப்
பள்ளம்பெருகிப் பாலர் விளையாண்டு
குளங்கள்பெருகிக் குழந்தைகள் விளையாண்டு
சேங்கை பெருகிச் செம்பொன் விளையாண்டு

ஐந்நூறு பால்பசுக்கு
அள்ளி முகங்கழுவி
முந்நூறு பால்பசுக்கு
மோந்து முகங்கழுவி

---

44 இது போன்ற தொரு கற்பனை தாலாட்டிலும் உண்டு.

"தம்பி அழுத கண்ணீர்
ஆருகப் பெருகி ஆனை குளித்தேறிக்
குளமாகத் தேங்கிக் குதிரை குளித்தேறி
வாய்க்காலாய் ஓடி வழிப்போக்கர் வாய்கழுவி
இஞ்சிக்குப் பாய்ந்து எலுமிச்சை வேரோடி
மஞ்சளுக்குப் பாய்ந்து மருதோன்றி வேரோடித்
தாழைக்குப் பாய்கையிலே தளும்பியதாம் கண்ணீரும்!
வாழைக்குப் பாய்கையிலே வற்றியதாம் கண்ணீரும்!"

இச்சிக்குப் பாய்ச்சி[45]
எலுமிச்சை வேரோடி
நச்சிக்குப் பாய்ச்சி
நார்த்தைக்கு வேரோடி
மஞ்சளுக்குப் பாய்ச்சி
மாதுளைக்கு வேரோடி

இச்சிக்கும் கீழே
இருக்கிருள் ராவாத்தாள்!
நச்சிக்கும் கீழே
நடக்கிருள் ராவாத்தாள்!
மஞ்சளுக்கும் கீழே
மறைகிருள் ராவாத்தாள்![46]
பால்சட்டிக்கும் கீழே
பதுங்குகிருள் ராவாத்தாள்![47]
நெய்ச்சட்டிக்கும் கீழே
நிறக்கிருள் ராவாத்தாள்!
மோருக் குடத்தில்
மிதக்கிருள் ராவாத்தாள்!
தண்ணீர்க் குடத்தில்
தவக்கிருள் ராவாத்தாள்!

---

45 இஞ்சி-இச்சியாயிற்று. 'நச்சி' யாதெனப் பொருள் விளங்கவில்லை.

46 வேர்களுக்கெல்லாம் நீர்பாய்தலைக் கூறி, அடியில் சுற்றித்தேங்கும் நீரின் மேலும் பிறையின் உருவம் நிழலாடுவதை இவ்வாறு நயமாகக் குறிப்பிடுகிருள்.

47 பாலின் நிறமும் மோரின் நிறமும் வெண்ணெயின் நிறமும் நிலவின் நிறத்திற்கு உவமையாவதை இங்ஙனம் குறிக்கிருள். தண்ணீர்க்குடத்தில் நிலாத் தெரிவதைத் தவழ்வதாகக் குறிப்பிடும் அழகே அழகு! நீர்ப் பொருளில் நிலவின் நிழல் தெரிவதைப் பதுங்குவதாய், நிறப்பதாய், மிதப்பதாய், தவழ்வதாய்க் கூறும் சொல்லாட்சித்திறன் போற்றத்தக்கது.

# 21

## பொங்கி வளரும்
## புதுநிலவு

மழைபொழிந்த பிற்பாடு மாசுமருவற்ற நீல வானிலே கோலநிலவு கூடி வளர்கிறது. அதன் ஒளியுருவிலே உள்ளம் பறிகொடுத்த ஒருத்தி கற்பனையின் பிறப்பிடமாய்க் கவிதை வடிக்கின்ருள்!

கறுக்கரிவாள் போலே
    கண்திறந்தாள் ராவாத்தாள்!
சித்தரிவாள் போலே
    சிரிக்கிருள் ராவாத்தாள்!
வெட்டரிவாள் போலே
    வெளிச்செரிச்சாள் ராவாத்தாள்
வாங்கரிவாள் போலே
    வளருருள் ராவாத்தாள்!

ஆலம் சருகலிலே[48]
    அன்னங்கள் மேய்ந்தாற்போல்
ஆராய்ந்து எழுந்திருச்சு
    வாராளே ராவாத்தா(ள்)!
புங்கஞ் சருகலிலே
    பொய்க்கோழி மேய்ந்தாற்போல்
பூரிச்சு எழுந்திருச்சு
    வாராளே ராவாத்தா(ள்)!!

---

48 ஆலம்சருகு-நீலவானம்; அன்னங்கள்-நிலவும் விண்மீன்களும். இது போலப் புங்கம் சருகு-நீலவானம்; பொய்க்கோழிகள்-நிலவும் விண்மீல்.களும்; வாழைஇலை-நீலவானம், மடல்துளிர்கள்-நிலவும் விண்மீன்களும்; தென்னை இலை-நீலவானம், சிறுதுளிர்-நிலவும் விண்மீன்களும்.

வாழை இலைகளிலே
மடல்துளிர்கள் மேய்ந்தாற்போல்
வாள் உருவித்
தோளில் வைத்து[49]
வாராளே ராவாத்தா(ள்)!

தென்னை இலைகளிலே
சிறுதுளிர்கள் மேய்ந்தாற்போல்
சிங்காரக் கொட்டோடே
வாராளே ராவாத்தா(ள்)!
போடுங்கள் எல்லோரும்
பொன்னுந் திருக்குலவை!!

## 22

### நிலாவின் உலாவே அம்மனின் உலா!

பிறைநிலா வானில் உலாவருவதும் உள்ளூருக் கோட்டையம்மன் தேரில் பவனிவருவதும் இப்பெண்களுக்கு ஒன்றுதான். எனவே ஒருத்தி நிலாவின் உலாவரும் அழகைப் பாடிமுடித்ததும் மற்றவள் அம்மனின் தேர்க்காட்சியைப் புனைந்து பாடுகிறாள்.

யானை வாரதைப்
பாருங்களே!
யானை அசைந்து
வாரதைப் பாருங்களே!
யானைத் தடம்போலக்
கோட்டையம்மன்[50]

49 வாள்போல் வளைந்த பிறைநிலவைத் தோளிலிட்டு நிலவுத்தெய்வம் விளங்குவதாக ஒரு கற்பனை.

50 இவ் அழகிய பாடல் தேவகோட்டையில் வழங்குகிறது. தேர்மீது இறைவி உலா வருவதை நேரில் காட்டுவது போன்ற இது நிகரற்ற நாட்டுப்பாடல்களுள் ஒன்று எனலாம்.

அட்டிகை மின்னலைப்
பாருங்களேன்!!

கரடி வாரதைப்
பாருங்களே!
கரடி கனைத்து
வாரதைப் பாருங்களே!
கரடித் தடம்போலக்
கோட்டையம்மன்
காப்பு மின்னலைப்
பாருங்களேன்!!

ஒட்டை வாரதைப்
பாருங்களே!
ஒட்டை ஓடி
வாரதைப் பாருங்களே!
ஒட்டைத் தடம்போலக்
கோட்டையம்மன்
ஒட்டியாண மின்னலைப்
பாருங்களேன்!!

பச்சி வாரதைப்
பாருங்களே!
பச்சி பறந்து
வாரதைப் பாருங்களே!
பச்சித் தடம்போலக்
கோட்டையம்மன்
பதக்க மின்னலைப்
பாருங்களேன்!

பாகை பழுத்ததைப்
பாருங்களே!

பாகை பக்கம்
 பழுத்ததைப் பாருங்களே!
பாகைப் பழம்போலக்
 கோட்டையம்மன்
பட்டு மின்னலைப்
 பாருங்களேன்!!

சூரை படர்ந்ததைப்
 பாருங்களே!
சூரை சுற்றிப்
 ட ர்ந்ததைப் பாருங்களே!
சூரைத் தடம்போலச்
 சிரவெளி நாதர்
துப்பட்டா மின்னலைப்
 பாருங்களேன்!![51]

போடுங்கடி பெண்டுகளா
 பொன்னுய் ஒருகுலவை!!

## 23

### நிலவும் துகிலும்

நிலவைத் துகிலென்று கற்பனை செய்யும் மரபு உண்டு. வெண்ணிறமான நிலவொளி மெல்லிய பட்டாடை போல ஒளிர்கிறது. இந்த அடிப்படையில் எழும் ராவாண்டைக்

51 இப்பாடல் முழுதும் 'திரும்பத் திரும்ப வரும் ஓர் அமைப்பு' இருப்பதை உணரலாம்; தாழிசை போன்ற அமைப்பு. சேய்மையிலேயே பார்த்ததை அண்மையிலே பார்க்க வைத்து அடுத்து அதிலிருக்கும் ஒரு நுட்பத்தையும் பார்க்க வைக்கும் அமைப்பு இது. இப்பாடலில் ஒருவித 'யாப்பும் வடிவமும்' பொருளுக்கேற்பத் தானே அமைந்துவிட்டன. யாப்பிலக்கணத்தில் இதற்கு இடமில்லையென்றாலும் இலக்கியத்தை விட்டு இதை அகற்ற முடியாது.

கற்பனை விரிந்து விரிந்து செல்கிறது. பருத்திவிதைத்த இடம், பருத்தியின் வளர்ச்சி, காயின் சிறப்பு, பாலாடை போன்ற பருத்தியின் அழகு போல்வன முதலிற் பேசப்படுகின்றன.

கொப்பாத்தாள் வெள்ளிப் பலகையில், மேலிருக்கும் திண்ணையில் அமர்ந்து நூல்நூற்கும் அழகும் நூலின் சிறப்பும் அந்நூலாலான பட்டின் மதிப்பும் பிறகு பேசப்படுகின்றன.

தெற்கு வடக்கிலே
சாலையைக் கோலிச்
செண்பகத் திடலிலே
பருத்தியை விதைத்து
ஊசி போல
மூளைக்குமாம் பருத்தி
ஊமத்தங் காய்போலக்
காய்க்குமாம் பருத்தி
பாவலை போலப்
படருமாம் பருத்தி
பாலாடை போலப்
பறக்குமாம் பஞ்சு-சிறு
பாவைகளோடிப்
பொறக்கும் பருத்தி

அல்லியக்கா
மேலிருந்து
அழகியக்கா
கால்நாட்டி
வெள்ளிப் பலகையிலே
மேலிருக்கும் திண்ணையிலே
மெல்லிய நூலும்
நூற்பாளாம் அம்மே!
நூலும் ஒருபலமாம்
முழமும் பதினாரும்

நூலு விலைமதிக்கும் - சீமை
முப்பத்தாறு தேசமெங்கும்
பட்டு விலைமதிக்கும் - சீமை
பதினாறு தேசமெங்கும்![52]
சேலை விலைமதிக்கும் – சீமை
எம்பத்தாறு வட்டகையும்!
போடுங்கடி பெண்டுகளா
பொன்னாந் திருக்குலவை!

## 24

### பாலு தளும்பிப்
### பட்டுவண்ணத்தில் தோய்ந்ததென்ன?

மற்ருெரு 'ராவாண்டைப்பெண் இதே கற்பனையில் மேலும் ஒருபடி முன்னேறுகிருள். 'நீலவான் ஆடைக்குள் உடல்மறைத்து, நிலாவென்று காட்டுகிருய் ஒளிமுகத்தை' என்று புரட்சிக்கவியில் பாரதிதாசன் பாடினுர், தங்க வண்ணப் பட்டுடுத்திய பெண் ஒருத்தி தயிர்க்குடத்தைத் தலையில் வைத்துக்கொண்டு சென்றபோது, அத்தயிர்க்குடம் தளும்பி அவள் சேலையில் தயிர்வண்ணம் தோய்ந்ததுபோல நீலவான்ஆடையில் நிலவொளி பளிச்சிடுகிறது! கவிஞர்களும் போட்டியிட முடியாத கற்பனைவளம் பொங்கிவருகிறது, இவ்வாய்மொழிப் பாடலில்!

தங்கவண்ணம் கொஞ்சு[53]டுத்தித்
தயிரு தலையில்வைத்துத்

---

52 "பட்டு விலை மதிப்பாள் பகுசியுள்ள கோட்டையம்மா
சேலை விலை மதிப்பாள் தெய்வகுலக் கோட்டையம்மா
புடைவை விலைமதிப்பாள் பொறுமையுள்ள கோட்டையம்மா"
என்று, தேவகோட்டையில் இவ் அடிகள் சிறிது மாற்றிப் பாடப்படுகின்றன.

53 கொஞ்சுடுத்தி-கொய்து உடுத்தி, 'கொசுகம்' வைத்துடுத்துதல்

தயிரு தளும்பித்
    தங்கவண்ணம் தோஞ்ச[54]தென்ன?

பச்சைவண்ணம் கொஞ்சுடுத்திப்
    பாலு தலையில்வைத்துப்
பாலு தளும்பிப்
    பச்சைவண்ணம்[55] தோஞ்சதென்ன ?

முத்துவண்ணம் கொஞ்சுடுத்தி
    மோரு தலையில்வைத்து
மோரு தளும்பி
    முத்துவண்ணம் தோய்ந்ததென்ன?

போடுங்கடி பெண்டுகளா
    பொன்னுந் திருக்குலவை !

## 25

### *சலவை தந்த நிலவொளியோ ?*

நிலவைப்பற்றிய 'துகிற்கற்பனை' இன்னும் வளர்கிறது. காஞ்சிபுர வண்ணான் கல்லால் அடிக்காமல், கஞ்சி கொண்டு தப்பாமல் கையால் வெளுத்த நயமே காஞ்சிபுரப்பட்டின் பளபளப்புக்குக் காரணமாம்! மேலும் இதற்குச் சலவைநயமோ சலவை செய்தவன் கைநயமோ காரணங்களாகா கொய்து உடுத்தும் கொப்பாத்தாளாகிய கொடியனையாள் இடைநயமே காரணம் என்று தன் கற்பனைக்கோர் மணிமகுடமும் சூட்டு கிறாள் இக்காரிகை !

---

54 தோய்ந்தது என்ன.

55 தங்க வண்ணத்திலான பட்டில் தயிர் வண்ணமான வெண்மை தோய்ந்தது என்றும் பச்சை வண்ணப்பட்டில் பால்வண்ணம்தோய்ந்தது என்றும் முத்துவண்ணப் பட்டில் மோர் வண்ணம் தோய்ந்ததென்றும் கொள்ளவேண்டும். இவை நீலவானத்தில் நிலவொளி வீசுவதற்கு உவமைகளாயின.

ஒத்தை விறகுவைத்து
ஒசத்தியாய்த் தீமூட்டி
வேலா விறகுவைத்து
வெள்ளாவி தீமூட்டி

கல்லால் அடிக்காமல்
கஞ்சிகொண்டு தப்பாமல்
கையால் வெளுத்துவாடா
காஞ்சிபுர வண்ணனே !

வெள்ளை நயமோ
வெள்ளாவி நயமோ
சேலை நயமோ
சீமாட்டி கைநயமோ

சலவை நயமோ
சலவை செய்துவந்தான் கைநயமோ
கொஞ்சுடுத்துவாள் கொப்பாத்தாள்
கொடியாள் இடைநயமோ?

போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை !

## 26

### முத்தும் நூலும்

கன்னிப்பெண் ஒருத்தி நல்ல மணாளனை வேண்டி வழிபடுகின்ருள். மஞ்சள் பூசித் தலைமுழுகி மண்டியிட்டுக் கேட்கின்ருள். முத்தும்சிறியது, நூலும் மெல்லியதாகையினுல் மிகக் கவனமாகக் கோக்கவேண்டும். இளம் பெண்ணொருத்தி தக்க கணவனை அடைவதும் இத்தகையதேயாகும். சிறிது தவறினுலும் வாழ்வு வீணுகிவிடும் அன்ருே? எனவே முத்துச் சிந்திவிடாமலும் நூலறுந்துவிடாமலும் கோக்கவேண்டியது இறைவியின் கடமையாகிறது. 'ராவாத்தாளைப் பார்த்து

இங்ஙனம் பொருத்தமான கணவன் வேண்டுமென்பதைக் குறிப்பாகவும் நயமாகவும் கேட்கிருள், ஓர் இளம்பெண் !

முக்கலப் பிண்ணுக்கு
முறுக்கி உருட்டிவைத்து
ஐந்து திலாம் மஞ்சள்
அரைத்து உருட்டிவைத்து
செங்கமடை பெய்யையிலே
சென்று தலைமுழுகி
மஞ்சமடை வாசலிலே
வந்து தலைமுழுகி
பாசி ஒதுக்கிப்
பாங்காய்த் தலைமுழுகி
அல்லி ஒதுக்கி
அழகாய்த் தலைமுழுகிக்
கோரை ஒதுக்கிக்
குலுங்கத் தலைமுழுகி

முக்காலி மேலிருந்து
முத்து மயிருணர்த்தி
நாற்காலி மேலிருந்து
நல்ல மயிருணர்த்தி
கோக்காலி மேலிருந்து
தோகை மயிருணர்த்தி
சுருள்மேல் உட்கார்ந்து
சுருட்டை மயிருணர்த்தி
முத்தும் சிறுமுத்து
நூலும் சிறுநூலு
சிந்தாமைக் கோரடியோ
செல்வப்பெண்ணே ராவாத்தாள் !
மங்காமைக் கோரடியோ
வருடப்பெண்ணே ராவாத்தாள் !

போடுங்கள் எல்லோரும்
பொன்னுந் திருக்குலவை ![56]

## 27

### மகளிரின் மலர்வழிபாடு

இரவுவேளையில் 'நந்தவனம் மலர்ந்து விளங்குவது போல' வானம் விளங்குகிறது. இத்தகைய நிலாவிற்கு மலரெடுத்து வழிபட எண்ணுகிருள் ஒரு 'ராவாண்டைப் பெண்.

புதுக்கோட்டை நந்தவனம்
பூவாய்ச் சொரிந்தாப்போல்
மதுரையி நந்தவனம்
மலராய் மலர்ந்தாப்போல்
மகிழ்ச்சியுள்ள நிலாவுக்கு
மலரெடுப்ப தெக்காலம்?
அறந்தாங்கி நந்தவனம்
அரும்பா மலர்ந்தாப்போல்
அருமையுள்ள நிலாவுக்கு
அரும்பெடுப்ப தெக்காலம்?

---

56 கவிதையனுபவம் (Poetical Experience) என்று குறிப்பிடுவர். இக் கவிதை அனுபவம் கவிஞனிடமிருந்து படிப்பவனுக்குச் செல்கிறது இவ் அடிகளை ஒரு முறைக்கு இருமுறை படித்தால் தலைமுழுகி மயிருணர்த்தும் மனவுணர்வு தானே வந்துவிடும். மயிருலர்த்துதலை மயிருணர்த்துதல் என்பர்.

முத்து, நூல் என்பன படிமப் பொருளன (Symbols); பொருத்தமான கணவனுடன் சிந்தாமல் சிதருமல், மங்காமல் மறையாமல் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்பதை ஓர் இளம் பெண் இதைவிட நாகரிகமாகவும் மறைபொருளாகவும் கேட்க முடியாது.

## 28

**நிலாவுக்கு**

**இயற்கையின் மலர்வழிபாடு**

நிலவிற்கு இயற்கை பூத்துக் குலுங்கி நின்று வரவேற்பு நல்குகிறது. காலையிலே கார்த்திகைப்பூவும், நேரம்பட நேரம்பட நெருஞ்சிப்பூவும்பொழுதுபடப் பொழுதுபடப்புளியம் பூவும் மாலையிடுகின்றன. சரம் சரமாகப் பூப்பதை 'மாலையிட' என்ற சொல்லாட்சி திறம்படக் காட்டுகிறது. மலர்கள் பூக்கும் நேரமும் உணர்த்தப்படுகிறது.

மாடு புனைந்துவர
மாதுளங்காய் கோலிவர
ஆடு புனைந்துவர
அவரைக்காய் கோலிவர
கோழி புனைந்துவர
கொவ்வைக்காய் கோலிவர
காலையிலே காலையிலே
கார்த்திகைப்பூ மாலையிட
நேரம்பட நேரம்பட
நெருஞ்சிப்பூ மாலையிட
பொழுதுபடப் பொழுதுபடப்
புளியம்பூ மாலையிட
அந்திபட அந்திபட
ஆவிரம்பூ மாலையிட
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை!

## 29

**ஐயன்மார் வேட்டையாடிவரும் அழகு**

அன்று பெண்களுக்கு 'ராவாண்டை போடுதல் பொழுதுபோக்கும் நோன்புமாயிற்று; ஆண்களுக்கு வீரமும்

வேட்டையாடுதலும் கடமையாக இருந்தன. அவர்கள் எவ்வாறு வேட்டையாடி வருவர் என்ற செய்தி, பெருமிதத்தோடு இப்பாடலில் இடம் பெறுகிறது. தந்தை,கணவன், தமையன் அனையாரை ஐயன்மார், ஐயா என்பதே அக்கால வழக்கு. இங்கு 'ராவாண்டைப் பாட்டு 'வீரசூர அய்யாக்கள்' என்று அவர்களைச் சுட்டுகிறது.

முதலில் வேனிற்காலத்தில் வேப்பமரம் தளிர்த்துப் பூக்கும் செய்தி நிரல்பட உணர்த்தப்படுகிற அழகு கவின்மிகு சொற்சித்திரமாய்க் காட்சிதருகிறது.

வேப்பம் பூவும்
பூக்கப் பூக்க
வேப்பம் சருகும்
உதிர உதிர
வேப்பம் கொழுந்தும்
தழையத் தழைய
வேப்பமணிப் கொட்டலிலே
என்னமணிச் சத்தமென்பார்!
யானைமணிச் சத்தமில்லை
குதிரைமணிச் சத்தமில்லை!
கச்சை வரிந்துகட்டி
கருங்கச்சை செங்கமிட்டு
வேட்டி வரிந்துகட்டி
வெள்ளவேட்டி செங்கமிட்டு
வீரசூர அய்யாக்கள்
வேட்டையாடி வாராக!
போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை!!

## 30

### வீரமும் காதலும்

'கருப்பின்கண் மிக்குள்ளது அழகு' என்பது தமிழ் இலக்கண எடுத்துக்காட்டு. வேட்டையாடி வருகின்றான் கருப்பான கட்டழகன். அவனுக்குக் கச்சையிலே மறு. இது யானை, குதிரைகளால் ஏற்பட்ட மறுவன்று. பிறகு எதனால் வந்தது? 'சிந்தூரத் தண்ணி தெறித்ததால் வந்த மறுவென்று' அவன் தப்பிக்க முயல்கிறான். உண்மையில் அது காதலியின் செந்தூரப் பொட்டின் விளைவே என்பதை அவனது வாக்குக் காட்டிக் கொடுத்து விடுகிறது.

கருப்பா கருப்பழகா
கருஞ்சோலைக் கட்டழகா
நீகட்டிவரும் கச்சையிலே
என்னமறுப் பட்டதுவோ?

ஆனை மறுவுமில்லை
குதிரை மறுவுமில்லை
மங்கைநல்லாள் கோயிலிலே

மழைக்கொதுங்கி நிக்கையிலே
செந்தூரத்தண்ணி
தெறிச்சுதோ, தெள்ளமுதம்!

போடுங்கடி பெண்டுகளா
பொன்னுந் திருக்குலவை!

## 31

### மழை பொழிந்தது,
### வளம் நிறைந்தது!

ராவாண்டை போடுவதால் மழை பொழியும் என்றும் நம்பினார்கள். நெற்கதிர்களைக் கரையான் பிடித்துத் தின்னு

மளவு மழை பெய்யாமல் போய்விட்டது. அய்யனர் அருளால் மழைபொழிந்து கொப்பாத்தாள் போதும் போதும் என்னு மளவு நாடு பொலிவுடையதாயிற்று.

காட்டுக் கரையானே
  கதிரைவந்து மேயுதுன்னு[57]
மாலையிட்ட அய்யனரு
  மழையை வரவழைத்தார்!
பேயுமாம் பெரியமழை
  பெருகுமாம் சங்கரக்கண்மாய்
உடைக்குமாம் பெரியமடை
  விளையுமாம் சங்கரவயல்
கட்டுக் கலங்காணும்
  கதிருழக்கு நெற்காணும்
மாமரத்தை வெட்டி
  மரக்கால் திருக்கடைஞ்சு
கூலி குறுணியினு
  கொடுப்பாரு அய்யனரு
போதும் போதும் என்பாளாம்
  பொறுமையுள்ள கொப்பாத்தா(ள்)!
போடுங்கள் எல்லோரும்
  பொன்னுந் திருக்குலவை!

---

57 "காட்டுக் கறையானை, கதிரைவந்து கொய்யிதுன்னு" என்றும் பாடுவர். கரையான் அரிக்குமளவு வறட்சி ஏற்பட்டதென்பதே பொருத்தமாக வுளது. கறை அடிகளையுடைய யானை கதிரைக் கொய்ததாகப் பிறிதொருபாடம் பொருள்படும். தினைப்புனத்தை யானை புகுந்து அழிப்பதை இது நினைவூட்டுகிறது.

# 32

## செல்வம் பொழியும்
## தேர்த் திருவிழா

'ராவாண்டை போடுவதால் செல்வம் பொழிகிறது. யானைகள் அசைந்துவரத் தேர் புறப்பட்டு வருகிறது. கொப்பாத்தாள் வாசல் சீரும் சிறப்பும் பெறுகிறது!

முன்னே வரும் யானையைப் புனைந்துவிட்டால், தேர்த் திருவிழா முழுவதையும் புனைந்தது போல இருக்கும் என்று கருதிப் போலும் யானையைப்பாடுகிருள்'ராவாண்டைப்பெண். செல்வத்தின் சிறப்பையுணர்த்தும் உருவகக் காட்சியாகவே ஊர்வலத்தின் முன்னே யானை வருகிறது.

ஆனை ஒரு ஆனை
அகிலா புரத்தானை
குட்டி மகிசானை
கொம்பு'ரெண்டும் பொன்ஞனை
யானைகளைப் பார்த்தா(ல்)
மேகங்கள் போலிருக்கும்!
யானைக் காதுகளைப் பார்த்தா(ல்)
தாழைமடப் போலிருக்கும்!
குளிப்பாட்டும் யானைக்குக்
கொம்பு திருத்திக்
குறுக்கே ஒரு நாமமிட்டு
நீராட்டும் யானைக்கு
நெத்தி திருத்தி
நேரே ஒரு நாமமிட்டு
யானை வந்திறங்கவே
ஆயிரக்கால் நாட்டவே

தேரு வந்திறங்கவே
கொப்பாத்தா(ள்) வாசல்
செல்வம் பொழியவே!
போடுங்கள் எல்லோரும்
பொன்னுந் திருக்குலவை!

## 33

### ராவாண்டை போட்டவர்கள் நல்ல நல்ல பயன் பெறுவார்!

வருசமொரு மாத்தையிலே
மாதம் ஒரு தேதியிலே
வாரக் கிழமையிலே
வருகுதந்தத் தைப்பூசம்!

தைப்பூசம் வந்தவுடன்[58]
சனங்களெல்லாம் சம்மதிச்சு
மாசிப்பிறை கண்டவுடன்
மனுக்களெல்லாம் சம்மதிச்சு
'ராவாண்டை போடவென்று
நருவெல்லாம்[59] சம்மதிச்சு
போட்டாப் பலிக்குமென்று[60]
பெரியவுக சம்மதிச்சு

---

58 தைமாதம் பூசநாளன்றே ராவாண்டை போடத் திட்டம் போடுவர். மாசிப்பிறைதான் விழாத்தொடக்கம்; மாசிமுழும்தி நாளில் இவ்விழா நிறைவுறும்.

59 சனங்கள், மனுக்கள், நரு (நரர்) என்பன மக்களைக் குறிக்கும் ஒரு பொருட் சொற்கள். மட்டங்கள், சின்னங்கள் ஒரு சோட்டுப் பெண்கள் என்பனவும் கன்னியரைக் குறிக்கும் ஒரு பொருட் சொற்களே.

60 ராவாண்டை போடுவதால் பயனுண்டு என்பது தெய்வ நம்பிக்கை. முதன்மையாகப் பிள்ளைவரம் தரும் என்பதே இங்குக் குறிப்பிடப்படு கிறது. தொடக்கத்தில் திருமணம் நிகழ வேண்டுமெனவும் நல்ல கண வன் வாய்க்க வேண்டுமெனவும் இந்நோன்பு கைக்கொள்ளப்பெற்று வந்தது; அடுத்து நல்வாழ்வும் செல்வமும் வேண்டப் பெற்றன. இன்று 'பிள்ளைவரமே' பெரிதாயிற்று.

இட்டாப் பலிக்குமென்று
    எல்லோரும் சம்மதிச்சு
ஆணோடு பெண் பிறந்த
    அனைவோரும் சம்மதிச்சுப்
பெண்ணோடு ஆண்பிறந்த
    பெரியோரும் சம்மதிச்சு

மட்டங்கள் கூடி
    மம்மட்டி தோளிலிட்டு
சின்னங்கள் கூடிச்
    சேர்ந்துமண் கொண்டுவந்து

குழந்தை யெல்லாம் கூடிக்
    கொட்டான் எடுத்துக்
குழைச்சுமண் கொண்டுவந்து

கிழவன் கிழவியர்க்குக்[61]
    கிளிபோல வீடுகட்டிப்
பணியாரம் சுட்டார்க்கும்
    பாளை[62]விளை யாண்டார்க்கும்
பாலன் வரந்தருவாள்
    பகுசியுள்ள 'ராவாத்தாள் !

ராவாண்டை போட்டார்க்கும்
    நடந்துவிளை யாண்டார்க்கும்[63]
நயமிகுந்த 'ராவாத்தாள்
    நல்ல் வரந்தருவாள் !

---

61 களிமண் கொண்டுவந்து கிழவன் கிழவியர்க்கு (தலைவன் தலைவிக்கு) வீடு கட்டி, உள்ளே ஒரு வீட்டிற்குரிய அடுப்பு பானை, சுளகு போல்வன அனைத்தும் மண்ணால் செய்து வைப்பர், கிழவன், கிழவி தவிர 'ராவாத்தாள், கன்னிமார் எழுவர் (ஆயத்தார்)எனப் பல உருவங்களைப் பிடித்து வைத்து வழிபடுவர்.

62 பாளை இளையோர், விளையாடுதல் என்பது ஆடல்பாடல்களைக் குறிக்கும்

63 நடந்து விளையாடுதல் - கும்மி குரவைக் கூத்துகளில் நடந்தும் ஓடியும் ஆடுதலைக் குறிக்கின்றது.

மண்ணெடுத்த பெண்களுக்கும்
மணைபோட்ட பேர்களுக்கும்[64]
மதிப்பான 'ராவாத்தாள்
மஞ்சன் வரம்தருவாள்!

போடவீடு விட்டார்க்கும்
பொங்கிப் படைத்தார்க்கும்
பொறுமையுள்ள 'ராவாத்தாள்
புள்ளைவரம் தருவாள்!

தேங்காய் உடைத்தார்க்கும்
தீபங்கள் பார்த்தார்க்கும்
செம்பொன் வரங்கொடுப்பாள்
சிறப்பான 'ராவாத்தாள்!

மாவிளக்கு[65] வைத்தார்க்கும்
வந்துவிளை யாண்டார்க்கும்
மஞ்சன் வரம் தருவாள்
மகிமையுள்ள 'ராவாத்தாள்!

---

64 மணை - திருமண மேடை. கிழவன் கிழவி என்ற சொற்களின் பொருளை உணராமலே இன்றும் அவற்றைப் பயன்படுத்துகின்றனர். கிழவன் கிழவியர்க்குக் கிளிபோல வீடுகட்டுதல் என்ற செய்தியும் மணை போடுதல் என்ற செய்தியும் இங்கு தலைவன் தலைவியரைக் குறிக்கும் சங்க இலக்கியச் சொல்லாட்சி வழிப்பட்டனவே இவை என்பதை விளக்கும்.

65 சிறுதெய்வ வழிபாடுகள் பல இங்கும் காணப்படுகின்றன. தேங்காய் உடைத்துத் தீபம் பார்த்தலும் மாவிளக்கு வைத்தலும் இங்குக் குறிப் பிடப்படுகின்றன. மற்றும் பிள்ளைவரம் கேட்டுப் பிறகு அதன்படி மகப் பேறு வாய்க்கப் பெற்றவர்கள் 'கரும்புத் தொட்டில்' கட்டுவதும் உண்டு.

இவ்வாறு ராவாண்டையைத் தொழுதல் சமுதாய வழக்காறுகளில் ஒன்றாகத் தோன்றிச் சமய வழக்காறாக மாறியதைக் காண்கிறோம். கன்னிப்பெண்கள் தக்க கணவரைப்பெற மேற்கொள்ளும் நோன்பாகத் தோன்றி, பிள்ளைவரம் முதல் எல்லா வரமும் வேண்டும் சிறுதெய்வ வழிபாடாக வளர்ந்ததைக் காண்கிறோம்.

அதிரேசம் போட்டார்க்கும்[66]
ஆடிவிளை யாண்டார்க்கும்
அள்ளிப் பணம் சொரிவாள்
அழகுள்ள ரர்வாத்தாள்!

பாட்டுப் படிச்சார்க்கும்[67]
பணிந்துவிளை யாண்டார்க்கும்
பாலன் வரந்தருவாள்
பகுசியுள்ள ராவாத்தாள்!

போடுங்கள் எல்லோரும்
பொன்னுந் திருக்குலவை!

---

66 அதிரசம், முறுக்கு, வடை, சுண்டல் போன்ற பற்பல பலகாரங்களையும் ராவாண்டையில் படைப்பதாக வேண்டிக்கொள்வதுண்டு. அதன்படி 'ராவாண்டை விழாவில் கொண்டுவந்து 'ராவாத்தாளுக்குப் படைப்பர். ஒவ்வொரு ஊரிரவும் 'ராவாண்டை முடியும்போது இப் பலகாரங்களை அனைவரும் பகிர்ந்துண்டு செல்வர். சில மகளிர் இக்காலத்தில் 'ராவர்ண்டையை விட இப்பலகாரத்தின் மீதுவைத்த விருப்பத்தினாலும் தவறாமல் வந்து இதில் பங்கு கொள்வதுண்டு என்பர்.

67 'ராவாண்டை பாடவல்லவர்' என்று பெண்களில் ஒருவர், இருவர் ஒவ்வோர் ஊரிலும் முன்பு இருப்பர். அவர்களே பெரும்பான்மையான பாடலைப் பாடுவர். இவ்வாறே 'ஒப்பாரி' பாடவல்லவர் என்றும் தாலாட்டுப் பாடல்கள் பாடவல்லவர் என்றும் முன்பு ஒவ்வோர் ஊரி லும் ஒரு சிலரேனும் இருப்பர். இவரை வாய்மொழிப் பாடகியர் எனலாம்.

# பின்னிணைப்பு

## காலக்கணிப்பில் ஒரு மாறுதல்

இரண்டாம் சந்திரகுப்த மௌரியன் காலத்தில் — கி. பி. 6-ஆம் நூற்றாண்டு என்பர் — வராக மிகிரர் என்ற வான நூலறிஞர் தோன்றி, இந்திய நாட்டுக் காலக் கணிப்பில் குறிப்பிடத்தக்க மாறுதல்களைச் செய்தார்.

நட்சத்திரங்களைக் கொண்டு கணிக்கப்படுகிற சூரிய மாத முறையை மாற்றி, வராகமிகிரர் சாந்திர மாத முறையைப் புகுத்தினார். அவர் சந்திரனை மையமாகக் கொண்டு வளர் பிறை தேய்பிறைத் திதிகளை ஆதாரமாக்கி மாதக் கணக்கை வகுத்தார் என்பர். அவர் தம் கணக்கின் படி பார்த்ததில், முன்னைய கணக்கில் 15 நாட்கள் கூடுதலாகும் எனக்கருதி, அப் பதினைந்து நாட்களைக் கழித்து விட்டுக் கணக்கிட்டார். இதனால் முன்னைய கார்த்திகை நிகழ்ச்சிகள், இப்போதைய ஐப்பசிக்குப் போய்விட்டன; முன்னைய தை மாத நிகழ்ச்சிகள் இப்போதைய மார்கழிக்குப் போய்விட்டன. இம் மாற்றத்தால் தைந் நீராடல், மார்கழி நீராடலாக மாறியிருக்கவேண்டும் என்பர் டாக்டர் தே. ஆண்டியப்பன் அவர்கள்.

திரு. எல். டி. சுவாமிக்கண்ணுபிள்ளை, இவ்வாறு பதினைந்துநாட்கள்ஏன் தள்ளப்பட்டன என்றகாரணத்தைவிளக்கியுள்ளார். சாந்திர மாத முறை திதி அடிப்படையினதாதலால் திதியும் நாளும் சிறிது வேறுபட்டன. அஃதாவது திதி 64 கொண்டதற்கு நாளும் 64 வாராமல் சிறிது குறைந்து 63.001412384 தான் வருவதால் இவ்வாறு ஏற்படும் குறைவு,

பலநூறு ஆண்டுகள் கழித்து நோக்கினால் 15 நாட்கள் குறையும் என்றே வராக மிகிரர் அப் பதினைந்து நாட்களைத் தள்ளி விட்டார்.

வராகமிகிரருக்குப் பிறகு வடநாட்டில் சாலிவாகன சகாப்தம் என்ற புதிய முறை பின்பற்றப்பட்டது. அதன்படி நமக்கு ஆனந்த ஆண்டு (1974-75) நிகழ்ந்தபோது. அங்கு சக ஆண்டு 1896 நடைபெற்றது. மாதக் கணக்கிலும் நமக்கும் அவர்களுக்கும் சுமார் 20 நாட்கள் வரை இடைவெளி ஏற்பட்டது.

தமிழ் மக்களும் சாந்திர மாத முறையைக் கைக்கொண்டிருக்கக் கூடும் என்பதற்கு, சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் பிறையைப்பார்த்ததும், காலக்கணி எத்தனை மதியங்களாயின என்று கூறியதால் அறியலாம். எனினும் வடநாட்டு வராகமிகிரர் செய்த மாற்றத்தின்படி, பிற்கால வானநூலார் வழிகாட்டியதற்கேற்பத் தமிழர்களும் மாதமுன்பின் அறியாமல் — காலப்போக்கில் மாற்றிக்கொண்டாட நேர்ந்ததுபோல் தோன்றுகிறது. இந்த அடிப்படையிலேயே கார்த்திகைவிழா தீபாவளியாகப் பதினைத்து இருபது நாட்கள் முன்னதாகவும் தைந் நீராடல் மார்கழி நீராடலாகவும் மாறின என எண்ண இடமுண்டு.

இவை இரண்டும் கி. பி. 6-ஆம் நூற்றாண்டை ஒட்டியே இம்மாறுதலுக்குட்பட்டிருக்க வேண்டும். எங்ஙனமாயினும் வான நூலறிஞர்கள் இன்னும் தெளிவாக ஆராய்வதற்கு இத் துறையில் நிறைய வாய்ப்பிருக்கிறது.

